உ

திருச்சிற்றம்பலம்

சாந்தையர் தம்பதம் ஏந்துகருத்தே

# ஆன்பட்டிக் கடவுளர்கள்

*கோவைகிழார்*

திருக்கயிலாயப் பரம்பரை மெய்கண்ட சந்தானம் பேரூராதீனம் கயிலைப்புனிதர் திருப்பெருந்திரு சாந்தலிங்க மருதாசல அடிகளார் அவர்கள் அருளாசியுடன் திருவள்ளுவராண்டு 2053 சுபகிருது ஆண்டு புரட்டாசித் திங்கள் 21 ஆம் நாள் பூரட்டாதி விண்மீன் (08-10-2022) சனிக்கிழமை அருள்மிகு அம்பலவாணப் பெருமான் திருமஞ்சண வழிபாட்டை முன்னிட்டு தவத்திரு சிதம்பர அடிகளார் நூலகத்தால் வெளியிடப்பெற்றது.

தவத்திரு சிதம்பர அடிகளார் நூலக வெளியீடு

*தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை*
*அறிவியல் தமிழ்க் கல்லூரி*
பேரூர், கோவை - 641010.

# நூற் குறிப்பு

பதிப்புரிமை : தவத்திரு சிதம்பர அடிகளார் நூலகம்

நூலின் பெயர் : ஆன்பட்டிக் கடவுளர்கள்

ஆசிரியர் : கோவைகிழார்

பதிப்பாசிரியர் : திருப்பெருந்திரு சாந்தலிங்க மருதாசல அடிகளார்

தொகுப்பு : சு.விக்னேசு, முனைவர் பட்ட ஆய்வாளர்

வெளியீடு : தவத்திரு சிதம்பர அடிகளார் நூலகம்
தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை
அறிவியல் தமிழ்க்கல்லூரி
பேரூர், கோவை – 641010

அச்சாக்கம் : சௌமி அச்சகம்,
1 ஈ, துடிலூர் ரோடு, சரவணம்பட்டி,
கோவை – 641 035
9842252779.

ரூ.50/- மதிப்புள்ள இந்நூல் திருமதி ப.திரிபுரசுந்தரி, திரு.சி.பிரகாஷ் இணையரின் பொருளுதவியால் வெளியிடப்படுகின்றது.

உ

*சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க*



*திருக்கயிலாய மரபு மெய்கண்டார் வழிவழி*
*பேரூராதீன குருமகாசந்நிதானம் கயிலைப் புனிதர்*
*முனைவர்* **திருப்பெருந்திரு சாந்தலிங்க**
**மருதாசல அடிகளார்**
**பேரூராதீனம், பேரூர், கோவை**

## பதிப்புரை

இன்ப அன்பினீர்,

அருள்திரு சாந்தலிங்கப் பெருமான் இன்னருள் பெருகுக. மேலைச் சிதம்பரம் என்று போற்றப்பெறும் சிறப்புக்குரியது பேரூர் திருத்தலம். இத்தலத்தில் இறைவன் ஆன்பட்டியிலே எழுந்தருளி ''திரு ஆன்பட்டியுடையார்'' என்ற நிலையில் அருள்பாளித்து வருகிறார். அத்தகைய பட்டியில் பட்டிப்பெருமானைச் சுற்றிலும் எழுந்தருளி அருள் வழங்குகின்ற தெய்வங்களைக் குறித்து விளக்குவதாக அமைகின்றது ''ஆன்பட்டிக் கடவுளர்கள்'' என்னும் இந்நூல். இந்நூலில் காணப்படும் தெய்வங்கள் பற்றிய குறிப்புகள் கோவைகிழார் அவர்களால் 1951 ஆம் ஆண்டு விளக்கியுரைக்கப் பட்டவையாகும். அந்த வகையில் பிறவாநெறித் தலமாகிய பேரூர் திருத்தல மூர்த்தங்கள், வழிபாடுகள், அவற்றின் சிறப்புகள் ஆகியவை அறியக்கிடைக்கின்றன. இந்நூலில் குறிப்பிட்டுள்ள கடவுளர்களைப் பற்றிய செய்திகள் சிறு நூல்களாக 24ஆம் குருமகா சந்நிதானங்களின் 78ஆம் நாண்மங்கல விழாவையொட்டி (2002) வெளியிடப்பெற்றன. இருபது ஆண்டுகளுக்குப் பிறகு அவை ஒரே நூல் வடிவில் இப்போது வெளியிடப் பெறுவது பாராட்டுக்குரியது.

திருவள்ளுவராண்டு 2053 புரட்டாசித் திங்கள் பூரட்டாதி நாளில் (08.10.2022) சனிக்கிழமை அன்று அருள்மிகு அம்பலவாணப் பெருமான் திருமஞ்சன வழிபாட்டு நிகழ்வை முன்னிட்டு நமது ஆதீனக் கல்லூரியின் தவத்திரு சிதம்பர அடிகளார் நூலகத்தின் சார்பில் வெளியிடப்பெறுகிறது. இந்நூலின் புரவலர்களாக திருமதி.ப.திரிபுரசுந்தரி திரு.சி.பிரகாஷ் இணையர் விளங்குகின்றார்கள். திருமதி திரிபுரசுந்தரி அவர்கள் நமது ஆதீனக்

கல்லூரியில் உடற்கல்வி ஆசிரியராக பணியாற்றியவர்கள். பணிக்காலத்தில் மாணவர் நலனிலும் கல்லூரி வளர்ச்சியிலும் மிகுந்த ஆர்வத்துடன் செயலாற்றிய சிறப்புக்குரியவர்கள். அவர்களும் இந்நூல் வெளிவருவதில் முனைந்து செயல்பட்ட கல்லூரி நூலகர் முனைவர்.திருமதி.அபிராமி, கட்டுரைகளைத் தொகுத்த முனைவர் பட்ட ஆய்வாளர் செல்வன் சு.விக்னேசு மற்றும் நூல் வெளியீட்டுப் பணிகளில் துணைநின்ற அன்பர்களும் இதனை அச்சாக்கம் செய்தளித்த சௌமி அச்சகத்தாரும் வாழ்வில் எல்லா நலங்களும் வளங்களும் பெற்று வாழ்வாங்கு வாழ அம்பலவாணப் பெருமான் இன்னருளையும் சாந்தலிங்கப் பெருமான் தண்ணருளையும் கயிலைக்குருமணி இருபத்துநான்காம் பட்டம் குருமகாசன்னிதானங்களுடைய குருவருளையும் நினைந்து வாழ்த்தி மகிழ்கின்றோம்.

வேண்டுந்தங்களன்பு,

அன்புள்ள,

சாந்தலிங்க மருதாசல அடிகள்



# நூன்முகம்

உலகம் ஒரு மாட்டுத்தொழுவம். அதில் உள்ள பசுக்கள்தாம் நாம். அப்பசுக்களை வழிநடத்துபவன் இறைவன். அவன் உயிர்கள்மீது கொண்ட கருணையினால் ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களையும் செய்கிறான். இதனால் இறைவன் நமக்குத் தலைவனாக இருக்கிறான். இந்தத் தத்துவம் பிற சமயங்களில் இருப்பதையும், 'மேய்ப்பன், ஆயன்' எனும் சொற்களால் அறியலாம்.

உலகின் மிகப் பண்டைய தத்துவச் சிந்தனை மரபான சைவ சித்தாந்தம் உயிர்களைப் பசு - என்றும், ஆ - என்றும் குறிக்கின்றது. இவ்விரு சொற்களும் மாடுகளைக் குறிக்கும் வேறு சொற்கள். எந்தப் பசுக்களானாலும் பசி தீர அலைந்த பிறகு இளைப்பாற இடம் (பட்டி) வேண்டும். அந்த இடமே பேரூர்ப் பட்டீச்சரம். இந்தத் தத்துவத்தை விளக்கவே, 'பேரூர் வந்துசேர முத்தி' எனக் கூறுகிறார்கள் பெரியோர்கள்.

புல்லாகிப் பூடாகிப் புழுவாகி மரமாகி, எல்லாப் பிறப்பும் பிறந்து, பிறவியில் தோன்றும் களைப்பினால் தன்னை நாடிவரும் உயிர்களுக்கு ஓய்வளிப்பவர் திருப்பேரூரில் எழுந்தருளி இருக்கும் இறைவன். ஆதலால் இறைவன் பட்டிப் பெருமான் எனும் பெயர்கொண்டு விளங்குகிறார். இங்குள்ள இறைவன் தான்தோன்றி. வெள்ளியங்கிரியின் வேர் ஓடிவந்து, பேரூரில் முளைத்து எழுந்தமையால் அதோமுக வடிவமாக இறைவன் அருள்செய்கிறார். இந்த இறைவனது பெயரே ஏனை இறை வடிவங்களுக்கும் அடையாளமாக அமைந்து, பட்டி விநாயகர், பட்டிக்குமரன், பட்டித்திருமால், பட்டிக் கூத்தர் எனும் திருப்பெயர்கள் வழங்கப்பெற்றன. இந்தத் திருப்பெயர்களின் விளக்கமாகவும், இத்தலத்து இறைவன்மீது கொண்ட அன்பாலும், வரலாற்றுப் பேரறிஞர் கோவைகிழார் அவர்கள் எழுதிய ஏழு கட்டுரைகள் இந்நூலாக ஆக்கம் பெற்றுள்ளன.

இந்நூல் எழுதும்போது கோவைகிழார் அவர்கள் இட்ட பெயர் 'பட்டிக் கடவுளர்கள்' என்பதாகும். இப்பெயர் கையெழுத்துப் பிரதியின் முகப்பில் எழுதப்பட்டுள்ளது. இதுவரை இந்தநூல், அச்சாக்கம் பெற்றதா என்று கோவைகிழாரது படைப்புகளின் பட்டியலில் தேடி அறிய முற்படுகையில், அவரது கையெழுத்துப்

பிரதிகளுக்குள் 'பேரூர் மூர்த்திகள்' எனும் பெயர் கிடைத்தது. ஆனால் நூல் கிடைக்கவில்லை. 'பட்டிக் கடவுளர்கள்' என்ற இந்தத் தொகுப்புதான் 'பேரூர் மூர்த்திகள்' என்ற பெயரில் வெளிவந்ததா என்பதை அறிய இயலவில்லை. பட்டிக்குமரன் என்ற கட்டுரைக்குள்ளும் பேரூர் மூர்த்திகள் என்ற உட்தலைப்பைக் காணமுடிகிறது. அது பேரூர்க் கோவிலுள் உள்ள முருகனது திருமேனிகளைக் கூறுவதாகவே அமைந்துள்ளது.

இருபத்து நான்காம்பட்டம் குருமகாசன்னிதானங்களாக விளங்கிய, கயிலைக்குருமணி திருப்பெருந்திரு பேரூரடிகளார் அவர்களது 78-ஆம் நாண்மங்கலப் பொலிவினையொட்டி, பட்டிப்பெருமான், பச்சைநாயகியம்மன், பட்டிக்குமரன் எனும் பெயரில் சிறுசிறு நூல்களாக வெளிவந்துள்ளன. 03.10.2002 அன்று அடிகளார் அவர்களது அருளாணையால் அச்சிடப்பட்ட அச்சிறு நூல்களுக்குப் பூலுவபட்டி குமரன் பண்ணை நிலக்கிழார் திருமிகு டி.எம் பழனிச்சாமிக் கவுண்டர், திருமதி தெய்வநாயகி பழனிச்சாமிக் கவுண்டர் ஆகியோர் புரவலர்களாக இருந்துள்ளார்கள்.

இந்நூல் பட்டிப்பெருமான், பட்டிப்பிள்ளையார், பட்டிக்குமரன், பட்டித்திருமால், பட்டிக்கூத்தர், பச்சைநாயகி அம்மன், அதிமூர்க்க அம்மன் எனும் ஏழு தலைப்புகள் கொண்டு அமைந்துள்ளது. இக்கட்டுரையின் மூலக் கையெழுத்துப் பிரதியினில் 11.1.1951, 14.1.1951, 1.2.1951 ஆகிய தேதிகள் இடப்பட்டுள்ளன. இவற்றால் 1951ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் இந்த நூல் எழுதப்பட்டுள்ளமையை அறியமுடிகிறது. 70-ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட நூல் ஆதலால் அக்காலகட்டத்தில் பேரூர்ப் பட்டிப்பெருமான் கோயில் இருந்த அமைப்பினை ஆசிரியர் கூறியுள்ளார். 1950-களில் முகப்பு மண்டபம் கட்டப்படாமல் முருகப்பெருமான் சன்னதி இருந்துள்ளது. இப்போதுள்ள மண்டபம் நூல் எழுதிய காலத்திற்குப் பின்னர் திருப்பணி செய்யப்பட்டது. ஆதலால் இந்நூலின்கண் முன்மண்டபம் இல்லாத நிலையைக் காட்டுகிறார்.

அதுபோல் அதிமூர்க்கம்மன் கோவில் இருப்பை வடக்கு மாட வீதியிலிருந்து சற்றுத்தள்ளி, வடக்குப்பார்த்த சன்னதி என ஆசிரியர் குறிப்பிடுகிறார். ஆனால், இக்கோயிலின் பழைய

சன்னதி தெற்கு நோக்கியும், புனரமைத்து நீராட்டப்பட்ட சன்னதி கிழக்குப் பார்த்தும் அமைந்துள்ளது. இவை நூலில் கூறப்பட்டதற்குப் பின் வந்த மாற்றங்கள்.

பிறவா நெறியாகிய பேரூரில் இறை வடிவங்களைத் தத்துவ நோக்கிலும், வரலாற்று நோக்கிலும், தெளிவுற நமக்கு அறிமுகம் செய்யும் இந்நூல் 25 ஆம் பட்ட குருமகாசன்னிதானங்களின் அருளாணயின் வண்ணம் நமது ஆதீனத்திலேயே மீண்டும் 20ஆண்டுகளுக்குப் பின் முழுநூலாகத் தொகுக்கப்பட்டு அச்சேற்றப்படுகிறது. அன்பர்கள் படித்து இன்புறுவார்களாக.





## விநாயகர் வணக்கம்

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்து அடிப்போற்று கின்றேனே.

# பட்டிப்பெருமான்

**’ஆரூ ரத்தா! ஐயாற் றமுதே! அளப்பூர் அம்மானே!**
**காரூர் பொழில்கள் புடைசூழ் புறவிற் கருகா வூரானே!**
**பேரூர் உறைவாய் பட்டிப் பெருமான் பிறவா நெறியானே!**
**பாரூர் பலரும் பரவப் படுவாய் பாசூர் அம்மானே!’**

*- சுந்தரர் தேவாரம்*

பட்டிப்பெருமான் என்ற திருப்பெயர் பேரூரில் எழுந்தருளியிருக்கும் இறைவன் திருப்பெயராகும். இறைவன் ஒருவனேயானாலும் ஒவ்வொரு கோயிலிலும் எழுந்தருளியிருக்கும் திருவுருவத்திற்கும் தனித்தனிப்பெயர் தந்து அப்பெயரால் அவனை வழிபடுவது தமிழ்நாட்டு வழக்கம்.

அதைச் சிந்தித்தே வாதவூரடிகள்,

**’............................ஒருவனுக்கே ஆயிரம்**
**திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ’**

என்றார். அப்படி வெவ்வேறு புனிதத் தலங்களிலும் வெவ்வேறு பெயர்களைக் கூறுவதற்கு வெவ்வேறு வரலாற்றுக் காரணங்களும் உண்டு. அவ்வாறு திருப்பேரூரில் கோயில் கொண்டிருக்கும் பெருமானுக்கும் ஒரு வரலாற்றுக் காரணம் கூறுவர்.

**‘‘பட்டிப்பெருமான்’’** என்ற சொல்லில் பட்டி என்றால் **மாட்டுத்தொழுவம்** அல்லது மாடுகளை அடைக்கும் **படலை வளைவு** என்று பொருள். பெருமான் என்றால் இறைவன் என்று பொருள். ஆகவே, பட்டிப்பெருமான் என்றால், மாட்டுத்தொழுவத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவன் என்று பொருள். அவ்விறைவன் பசுமாட்டுத் தொழுவத்திடையே, தோன்றி அப்பசுக்களைப் பாதுகாத்து ஆளுபவன் என அறிய வேண்டும். இவ்வுலகமே ஒரு பெரிய பட்டி. இதில் அடைபட்டிருக்கும் உயிர்களே பசுக்கள். பசுக்களாகிய உயிர்களோடே உடன் இருந்து, இவைகளைக் காப்பாற்றுபவனே பசுபதி அல்லது பட்டிப்பெருமான். அவனே திருப்பேரூரின்கண் எழுந்தருளி அவனை வழிபடும் மக்களாகிய உயிர்களைப் பாதுகாப்பவன்.

பண்டை நாளில் திருப்பேரூர் தோன்றியிருக்கும் இடமானது, ஒரு பெரிய இருளடைந்த அரசமரக் காடாக இருந்தது. அது நொய்யல் ஆற்றங்கரையில் நீர்ச்செழிப்பும், நிலச்செழிப்பும் படைத்து வானளாவிய பூம்பொழில் சோலையாக இருந்தது. அச்சோலையில் இருளர் என்ற மலைவகுப்பார்கள் வாழ்ந்தார்கள். அவ்விருளர் தலைவன் பேரை என்பவன் பெயரால் அவர்கள் வாழ்ந்த ஊர் பேரைப்பதி என்று அழைக்கப்பட்டு, பின்னால் ஊரானபோது பேரையூர் என்றாகி, அது பேரூர் என்று வழக்கத்தில் வந்ததாக ஒரு பண்டைய நூல் கூறுகின்றது (**சோழன் பூர்வபட்டயம்**).

அவ்வரச வனத்தில் ஒரு மாட்டுத் தொழுவம் (பட்டி) இருந்தது. பசு மாடுகள் மேய்ச்சலுக்காகச் சென்று, நொய்யல் ஆற்றில் நீரருந்திவிட்டுப் பட்டிக்குத் திரும்பின. அதில் ஒரு கொழுத்த காராம் பசு மிகுந்த மகிழ்ச்சியுடன் திரும்பிற்று. அதன் கன்று தாயைக் கண்டு தீவிரமாகக் குதித்து விளையாடிற்று. அவ்வாறு விளையாடினதில் அதன் கால் பட்டியில் இருந்த ஒரு புற்றில் புதைய, அதன் குளம்பு ஒரு கெட்டிப் பொருளின்மேல் பட்டது. அதில் வடு உண்டாகி இரத்தம் வெளிவந்தது. ஆனால் குளம்போ அதில் சிக்கிக் கொண்டது. காலை உதறியும் வெளிவரவில்லை. சினந்த கன்றோ தன்இளம் கொம்பால் குத்த, கால் வெளிவந்தது. ஆனால் இரத்தம் வெகுவாக வெளிவந்தது. இதைக் கண்டான் மாட்டிடையன். வியப்படைந்து ஊர்த்தலைவன் பேரைக்குச் சொன்னான். அவன் அதே காட்சியை வெள்ளியங்கிரியிலும் கண்டான். இரண்டு தலங்களும் ஒருமைப்பாடு கொண்டவை என்று வியந்தான். இரத்தம் பெருகின இடத்தை அகழ்ந்து பார்க்க அதில் ஒரு திருவுருவம் இருக்கக் கண்டான். அதனைச் சுற்றிக் கோயில் எழுப்பப்பட்டது. சோழனும், சேரனும் சமய முதலியும் வந்து ஆலயம் எழுப்பி ஊரும் கட்டினார்கள்.

இச்சரிதம் பண்டைய நூலில் உள்ளது. பின்னால் எழுதப்பெற்ற பேரூர் புராணமும் இதையே தழுவி, செய்யுள் வடிவில் அழகுபெறக் கூறுகிறது. அதில் பசு காமதேனு என்றும், கன்று அதனுடைய கன்று எனவும், கன்று மதோன்மத்தத்தினால் இரத்தம் சிந்தச் செய்ததாகவும், காமதேனு வருந்தித் துதித்ததாகவும், இறைவன் வெளிப்பட்டு வரமளித்ததாகவும் அது கூறுகிறது.

கன்றின் குளம்பும், கொம்பின் குறியும் பட்ட இடங்களை மூலமூர்த்தியின் முடியில் இன்றும் காட்டுகிறார்கள். தமக்கு இடர் விளைவித்தார்களையும் கருணை மேலிட்டுக் காப்பாற்றுவது, இறைவன் அருள் என்று பட்டிப்பெருமான் தோற்றச் சரிதம் காட்டுகிறது.

பட்டிப்பெருமானின் திருப்பெயர்களைப் பட்டீசன், பட்டிலிங்கம் என்று தமிழிலும் கோஷ்டீசுவரன் என்று வடமொழியிலும் வழங்குகின்றனர். காமதேனு இறைவனைத் தொழுவதற்காகத் தன் கொம்பினால் நிலத்தை அகழ, அங்கு உண்டான தீர்த்தத்திற்குச் சிருங்கி தீர்த்தம் (சிருங்கி - கொம்பு) என்று பெயர். இப்பெயர் சிங்கி என்றும், சிங்கம் என்றும் மருவிற்று. அதுகொண்டு அத்தீர்த்த வாயிலில் ஒரு சிங்க உருவம் அமைக்கப்பட்டிருக்கிறது. இதனைக் கோயிலுள் மகாமண்ட -பத்தின் வடக்குத் திக்கில் காணலாம்.

பெருமான் உயிர்களாகிய பசுக்கள் எல்லாருக்கும் முதல்வன். அவனுக்கு உயர்வு என்பதும் தாழ்வு என்பதும் இல்லை. உயர்ந்தோர்க்கு எத்துணை அருள் புரிவானோ அத்துணை தாழ்ந்தோருக்கும் புரிவான். உயர்வு, தாழ்வு என்பது மக்கள் கற்பனையே; இறைவன் சங்கற்பமல்ல. அவன் முன்னிலையில் பணக்காரன், ஏழை, நல்லவன், கெட்டவன். நல உடல் உடையவர், நோயாளி, பெரியவன், சிறுவன் எல்லாம் ஒன்றே. எல்லோருக்கும் அவனே தந்தையும் தாயும் ஆவான். உயிர்கள் தம்தம் வாழ்வில் செய்யும் வினைகளால் பல வேறுபாடுகள் அடைகின்றன. இறைவன் திருமுன் அவ்வேறுபாடுகள் மறையும். இந்தமுறையில் திருமுறைகள் இறைவனுடைய பண்புகளை விளம்புகின்றன. இதனைப் பேரூரில் ஒரு திருவிளையாட்டில் இறைவன் காட்டினார்.

சுந்தரமூர்த்திகள் நடுநாட்டில் தோன்றித் திருமணம் செய்து கொள்ள இருக்கையில், இறைவன் வேதியனாக வந்து அவரைத் தடுத்து ஆட்கொண்டு தமக்குத் தொண்டு புரியும்படி அருளிச் சென்றார். சுந்தரர் பின்னாலே பல திருத்தலங்களையும் தரிசித்துக்கொண்டும். திருப்பதிகங்களை அருளிச் செய்தும் சைவ சமயத்தைப் பரப்பிக் கொண்டு, மக்களை இறை வழிபாட்டில் அமையச் செய்து கொங்கு நாட்டையடைந்து திருப்பேரூர் குறுகினார். இறைவனோ சுந்தரருக்கு அருள்புரிவதற்கு உளம்

கொண்டார். அப்போது முந்தி வேதியனாக வந்ததை எண்ணி, இப்போது பள்ளனாக உருவெடுத்து இரண்டும் ஒன்றே என்று உணர்த்துவதற்காகக், கழனியில் உழவுத்தொழில் புரிந்து கொண்டிருந்தார். சுந்தரர் திருக்கோயில் சென்று அங்கு இறைவன் திருக்காணாது, பிள்ளையார் குறிப்பினால் நிலைமை அறிந்து கழனிக்குச் சென்று, அங்கு தொழில் செய்து கொண்டிருந்த இறைவனையும் இறைவியையும் வணங்கினார். இறைவனும் அருள்புரிந்தார். உயர்ந்ததுவும், தாழ்ந்ததுவும் ஒன்றே என்று உணர்த்தியது மட்டுமன்று, முதலாளித்துவமும், தொழில் முறையும் ஒன்றே என்று காட்டினார் அல்லவா! ஒவ்வொருவரும் தொழில் செய்தல் நன்று. தொழிலால் இழிவு இல்லை என்றும் ஒரு வேதியர்க்கு உணர்த்தினார் அல்லவா. சுந்தரர் இதனை அறிந்து போற்றினார்.

அப்போது சுந்தரர் வேண்டுதலுக்கு இணங்கி, இறைவன் திருச்சபையில் ஆனந்தக் கூத்தாடி தரிசனம் தந்தான். அதனைக் கண்டு வியந்து பின்னால் தில்லைக்குச் சென்று, இறைவனுடைய திருக்கூத்தை வியந்து போற்றும் போது,

**‘‘....................மீகொங்கில் அணிகாஞ்சிவாய்ப்**
**பேரூரர் பெருமானைப் புலியூர்ச்**
**சிற்றம்பலத்தே பெற்றாம் அன்றே’’**

என்று சுந்தரர் பாடினார். அதுகேட்ட தில்லைவாழ் அந்தணர்கள் பேரூர் வந்து, இறைவனை வணங்கி ஓர் அழகிய கோயிலெடுத்து வழிபாடு செய்தார்கள். அதுதான் இன்று அழகிய சிற்றம்பலம் என்ற பெயரால் வழங்குகின்றது.

பட்டிப்பெருமான் திருக்கோயில் கொண்டிருக்கும் பேரூரின் பெருமையை அறிந்து பலபேர் வழிபட்டார்கள். திருப்பணியும் செய்தார்கள். மிகச்சிறிதாய்த் தோன்றின ஆலயம், நாளாவட்டத்தில் மண்டபத்தின்மேல் மண்டபம் சேர்க்கப்பெற்றுப் பெரிய கோயில் ஆயிற்று. சுற்றிலும் பல சிற்றாலயங்களும், தீர்த்தங்களும் தோன்றின. கொங்கு நாட்டை ஆண்ட பல மன்னர் வமிசங்களும் இந்தத் திருப்பணியில் ஈடுபட்டார்கள். கரிகாற் சோழன் திருப்பணி சோழன்துறை என்ற பெயரில் அழியாமல் விளங்கிற்று. சுந்தரர் வரவு நாற்று நடவு உற்சவத்தில் நிலைத்திருக்கிறது. சேர நாட்டு வழிபாடு வீர கேரளநல்லூர்க் கல்வெட்டுச் சாசனங்களாக

இலங்குகிறது. பாண்டியர் நினைவு, பெருமாள் கோயிலில் அமைந்திருக்கிறது. கொங்குச்சோழர் திருப்பணி கருவறைப் பகுதியில் தோன்றுகிறது. தெற்கணாம்பி மாதய்யன் திருப்பணி தெப்பக்குளத்தின் சிற்ப அமைப்பில் விளங்குகிறது. நாயக்கர் ஆட்சி கனகசபையின் அழியாப் பெருமையில் பிரகாசிக்கிறது. பட்டிப்பெருமானைத் தரிசிக்க வருபவர்கள் இந்த அழியாச் சிற்பங்களை அனுபவிக்காதிருக்க இயலாது.

மதுரைத் திருமலை நாயக்கன் பிரதிநிதியாக, அவன் உறவினன் ஆன அளகாத்திரி நாயக்கன் கொங்கு நாட்டை ஆண்டு வந்தான். தன் ஆட்சியின் சிறப்பிற்கு அறிகுறியாகச் சிற்றம்பலத்தைச் செம்மையாக்கக் கருதினான். மருதமலையில் இருந்து பாறைகளை வெட்டிப் பேரூருக்குக் கொண்டு வந்து, அரிய சிற்பங்களைக் கொண்டு இறைவனுடைய திருவுருவங்களை சமைப்பித்தான். ஒரு சிறந்த சிற்பி தன் அரிய வேலைத் திறத்தைக் கொண்டு அவ்வழகிய சிற்றம்பலத்தை அணிவித்தான். வேலை முடிந்து பூர்த்தித்திருவிழாவும் குடநீர் முழுக்கும் ஏற்பாடாயின. சுற்றுப் பக்கத்து அன்பர்குழாம் ஏராளமாகக் கூடினார்கள். பெருந்திருவிழா நடந்தது. அக்கூட்டத்தைக் கண்டு வியந்து ஒர் இளைஞன் கோயிலுக்குள் வந்தான். சிற்பச் சிறப்புகளைக் கண்டு வியந்து கொண்டு சென்றான். கனக சபையில் நிறுத்தியிருந்த குதிரை வீரர், யாளி வீரர், கயவதமூர்த்தி, பிட்சாடனார், அகோர வீரபத்திரர், காளியம்மை, பிள்ளையார், ஆறுமுகர் முதலிய இத்திருவுரு -வங்களைக் கண்டு, பெருமிதப்புற்று இறுதியில், கோமுனி, பட்டிமுனி என்ற இரு முனிவர்களையும் கண்டு அவர்களுக்கு இருபுறமிருந்த குதிரை வீரர்களைக் கண்டான். உடனே முகம் மாறுபட்டது. ‘‘இவைகளைச் செய்த சிற்பி யார்? அவன் மதியற்றவன்’’ என்று கத்தினான். அருகில் நின்றவர்கள் வெகுண்டார்கள். நாட்டிலேயே சிறந்தவொரு கலைவல்லபனை, இவ்வாறு இழித்துக் கூறும் இந்த இளைஞனின் செருக்கு என்னே! என்று அதட்டி அரசன்முன் நிறுத்தினார்கள். அங்கேயும் அவ்வாறே கூறினார்கள். சிற்பிக்கு அளவற்ற சினம் வந்தது. குற்றம் காட்டினால் தன் கையைத் தறித்து விடுவதாக வாக்களித்தான். இளைஞன் சந்தனம் கொண்டு வரச்சொல்லி, அக்குதிரை வீரன் உருவத்திற்குப் பூச அச்சந்தனம் காய்ந்ததும் ஒரு பகுதி ஈரமாக இருந்ததைக் காட்டினான்.

உள்ளே சிதைத்துப் பார்க்க ஒரு குழியில் சிறிது நீரும், தேரையும் இருந்தன. சிற்பி தன் வாக்குப்படி உடனே கையைத் தறித்துக் கொண்டான். பின்னர் விசாரித்ததில் அவ்விளைஞன் அச்சிற்பியின் மகன் என வெளியாயிற்று. இள வயதில் படிக்கச் சென்றவன் அப்போதுதான் திரும்பிவந்தான். இந்தத் துயரக் கதை காட்டும் சிதைந்த கற்றூணைக் கனகசபையில் இன்றும் காணலாம்.

பட்டிப்பெருமான் திருக்கோயிலின் பெருமை இன்றும் சொல்லச் சொல்லப் பெருகும். இந்த நாளிலும் கணக்கற்ற மக்கள் பல திக்குகளிலிருந்து இங்கு வந்து வழிபட்டுப் பேறு அடைகிறார்கள். பங்குனி உத்திரப் பெருவிழா, மார்கழித் திருவாதிரை விழா, நாற்று நடவு, நடராசர் ஆறு அபிடேகங்கள் முதலிய பல விழாக்களும் சிறப்பானவை. இந்தத் தலம் முத்தித் தலம் ஆகையினால் மேற்கே மலையாள நாட்டிலிருந்து கணக்கற்ற மக்கள் புதுமதிதோறும் இந்தத் தலத்திற்கு வந்து ஆற்றில் நீராடிவிட்டு, நீத்தார் கடனை நிறைவேற்றிவிட்டுச் செல்வார்கள்.

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த பட்டிப்பெருமான் கோயில் சென்று, வழிபாடு செய்து, இறைவனது திருவருளுக்குப் பாத்திரமாவது மக்களின் அரிய கடமை அல்லவா!

**''கடல்சூழ்ந்த வுலகுண்ட கனிவாய னிருத்தொழிலுங் கமழ்ந்த தெய்வ**
**மடல்சூழ்ந்த மலர்க்குரிசின் முதற்றொழிலு மவரோடு மடிக்கு ஞான்றவ்**
**அடல்சூழ்ந்த வரன்வழியே மீட்டும்வரப் பணித்தருளி யாவிக் கெல்லாம்**
**மிடல்சூழ்ந்த விருடணிக்கு மாதிநகர்ப் பட்டீசர் விரைத்தாள் போற்றி.**

*- பேரூர்ப்புராணம்*

## பச்சை நாயகியம்மன்

**''கங்கைநதி சடைக்கரந்த கணவனா ருருக்கலந்த தனக்கே யல்லால்**
**துங்கமணிக் கோடிரண்டா யிரம்படைத்த கரியெவர்க்குந்**
**தூண்டன் முற்றா(து)**
**அங்கணெடும் புவனத்தென் றமைந்தனள்போற்**
**பாசமோ டங்குசங்கை ஏந்தும்**
**மங்கலமிக் கருள்பேரூர் மரகதவல்லியி னிருதாள் வனசம் போற்றி''**

*- பேரூர்ப்புராணம்*

பச்சை நாயகியம்மன் என்ற திருப்பெயர் பேரூர்த் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் அம்மனுடைய பெயராகும். அம்மன் பச்சை வண்ணம் உடையவள். ஆதலினால் அப்பெயர் வந்தது. அதற்குச் சரியான வடமொழிப் பெயர் மரகதவல்லி என்பது. இந்த அம்மன் பெயரை முன்னிட்டுக் கோயில் வட்டத்தில் பச்சையம்மாள், மரகதம்மாள் என்ற பெயர்கள் மிகுதியாகப் பெண்மக்களுக்கு இட்டுக் கொள்வதை நாம் காணலாம். அம்மன் திருக்கோயில் தனியாகச் சுவாமியின் கோயிலுக்கு வடவண்டையாய் சுவாமிக்கு இடப்பாகமாக அமைந்துள்ளது. அக்கோயிலுக்குத் தனியாக கருவறை, விமானம், அர்த்தமண்டபம், மகா மண்டபம், கொடிமர மண்டபம் முதலியன உண்டு. மகா மண்டபத்தில் வடவண்டை பெருமாள் எழுந்தருளி இருக்கிறார். தென்புறத்தில் துர்க்கை கோயில் கொண்டுள்ளாள். அர்த்தமண்டபத்தில் பள்ளியறை அமைந்திருக்கிறது. மகாமண்டபத்தில் தூண்களில் சிறு சிறு சிற்பங்கள் அழகாகச் செதுக்கப்பட்டிருக்கின்றன. ஆலயத்தைத் திருப்பணி செய்த அளகாத்திரி நாயக்கனுடைய உருவமும் ஒரு தூணில் ஆக்கப்பட்டிருக்கிறது.

முழுமுதற்கடவுள் ஒருவனே உண்டு. அவனைச் சிவலிங்க வடிவில் ஒவ்வொரு கோயிலிலும் எழுந்தருளி இருக்கிறான். என்றாலும் ஒவ்வொரு கோயிலிலும் வெவ்வேறு பெயர் தந்து அவனை வழிபடுகிறோம். அதற்குக் காரணம் அந்தந்தக் கோயிலில் ஏற்பட்ட ஐதீகங்களே ஆகும். சிவலிங்கம் ஒன்றே ஆகும். அதனுடைய தத்துவத்தின்படி ஆண் தத்துவமும், பெண் தத்துவமும் அதிலேயே கலந்துள்ளது. அதனால் பண்டைய காலக் கோயில்களில் சிவலிங்கம் ஒன்றே இருந்தது. ஆனால் பின்னாளில்

பெண் தத்துவத்தைப் பிரித்துக் காட்டுவதற்கு இலிங்கத்திற்கு அருகில் அம்மனை வைத்தார்கள். அதற்குத் தனி ஆலயம் முதலில் இருக்கவில்லை. அப்போது அம்மையின் பெயர் திருகாமக்கோட்டி நாச்சியார் என்று விளங்கியது. பிறகு சோழர் ஆதிக்கத்தில் ஆலய அமைப்பு மிகப்பெருகவே வெவ்வேறு சிறு ஆலயங்கள் கோயிலுக்குள் ஏற்பட்டன. அப்போது அம்மைக்குத் தனிக்கோயிலும், தனி வழிபாடும் ஏற்பட்டது. இதனைப் பல காரணங்களாலும் ஊகிக்கலாம். சுவாமி கோயில் சிறந்து விளங்கும். கல்வெட்டுக்களைக் கொண்டிருக்கும். அம்மன் கோயிலோ அப்படியிராது. இதுவே ஒரு சான்று அல்லவா.

பண்டைய கால அமைப்பில் சிவதத்துவத்தில் சக்தி தத்துவமும் அடங்கியிருக்க, பின்னாள் அமைப்பில் சிவ தத்துவத்திலிருந்து சக்தி தத்துவத்தை வேறாகப் பிரித்து வழிபட்டார்கள். ஆகவே கோயில்களும் வெவ்வேறாகப், பெயர்களும் வெவ்வேறு ஆகிவிட்டன. சிவபெருமான் பெயர் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறாக இருப்பது போல், அம்மன் பெயர்களும் பலவாறு மாறியமைந்தன. அந்தமுறையில்தான் பேரூரில் அம்மன் பெயர் பச்சைநாயகி என்று ஏற்பட்டது. வேறு கோயில்களில் அமைந்துள்ள அம்மை பெயர்களும் வேறுவேறாகி, வெகு அழகாகவும் பொருட் செறிவுடையதாகியும் இருக்கக் காணலாம்.

அம்மன் கோயில்கள் அமைப்புகளும் பலவாறாக இருக்கும். காஞ்சி, மதுரை முதலிய இடங்களில் அம்மன் ஆலயமே பண்டையது. சிறப்புற்றது. ஆகவே அங்கெல்லாம் அம்மன் கோயிலுக்கே பெருமை அதிகம். காஞ்சியிலே காமாட்சியம் -மனுக்குத் தனி ஆலயம் உண்டு. அந்நகரில் மற்றக் கோயில்களிலே தனி அம்மன் கோயில் இல்லை. மதுரையில் அம்மன் முதன்மையானது. சுவாமி கோயில் அம்மனின் இடதுபுறம் அமைந்துள்ளது. சுவாமி மூலத்தானமாக உள்ள மற்ற பெரும்பான்மையான கோயில்களிலே அம்மனே சுவாமிக்கு இடப்புறம் இருப்பார். அம்மனுக்கு சுவாமி இடப்பாகம் அளித்தான் அல்லவா! பேரூரும் அது போன்றதுதான்.

ஆனால் செட்டிநாட்டிலும் வேறு சில கோயில்களிலும் சுவாமி கோயிலுக்கு நேர்க்கோணமாக அம்மன் இருக்கும். அதாவது சுவாமி கிழக்கு நோக்கினால் அம்மன் தெற்கு நோக்கியிருக்கும். அப்போது சுவாமி கோயிலுக்கும் அம்மன் கோயிலுக்கும் மகா

மண்டபம் ஒன்றேயாக அமையும். அங்கு நின்று தரிசித்தால் இரண்டு கோயில்களையும் ஒரே பொழுதில் தொழமுடியும். இவ்வமைப்பு திருமயிலையில் வெகு சிறப்பாகக் காணலாம். வேறு சில ஆலயங்களில் அம்மன் கோயில் தனியான மதில் சுவர்களுக்கு இடையில் இருக்கும். அப்படிப்பட்ட கோயில்கள் மிகப்பெருங் கோயில்கள். சிதம்பரம், சீர்காழி, திருவண்ணாமலை போன்ற கோயில்களிலே அவ்விதக் காட்சி காணலாம்.

அம்மனுடைய பெருமைகளைப் பற்றித் திருப்பேரூர்ப் புராணம் இரண்டு படலங்களில் கூறுகின்றது. நான்முகன் புதல்வன் தக்கன் சிவபெருமானைப் பணிந்து உலகங்களுக்குத் தலைவனாக வாழுங்கால் உமாதேவியைத் திருமகளாகக் கொண்டு, சதி எனப் பெயர்தந்து, பெருமானுக்குத் திருமணம் செய்வித்துப் பெருமையுடன் வாழ்ந்தான். ஒரு தடவை வேள்வி புரியத் தொடங்கிப், பெருமானையும், பெருமாட்டியையும் அழைக்காமல் ஏனைய தேவர்களைக் கொண்டு வேள்வி செய்தான். அதற்குப் பெருமான் செல்லவில்லை. உமாதேவியார் செல்ல, தக்கன் சட்டை செய்யவில்லை. அவிபாகத்தையும் ஏனையோர்க்குத் தந்தான். உமையம்மை சினந்து நெருப்பில் மூழ்கி அவ்வுடலை நீத்தாள். அதனைக் கேட்ட பெருமான் வீரபத்திரக் கடவுளை உண்டாக்கி அனுப்ப, வீரபத்திரக் கடவுள் வேள்வியை அழித்து வேள்விக்கு வந்தோர்களையெல்லாம் தண்டித்தார். உமாதேவியார் மீண்டும் பருவதராசன் திருமகளாய் உதித்துச் சிவபெருமானைத் திருமணம் செய்ய வேண்டித் தவம் புரிந்தாள். அப்போது நாரதர் தோன்றி திருப்பேரூரில் தவம் செய்தால் எண்ணியது ஆகும் என்று சொல்ல அப்படியே உமையம்மை பேரூர் அடைந்து தவம் செய்தாள். இறைவன் கிழவேடம் பூண்டு தோன்றி வாக்குவாதம் செய்தும் உமையம்மை திடமாக இருக்க இறைவன் காட்சி தந்தார். பின்னர் பெருமானுக்கும் அம்மைக்கும் வெகுசிறப்பாகத் திருமணம் நடந்தது. மணவாளக் கோலம் கண்ட எல்லோரும் மகிழ்ந்தனர். இந்தத் திருமணவிழா ஆண்டுதோறும் பேரூரில் நடைபெறுகிறது.

திருப்பேரூரிலே ஆண்டு முழுவதும் திருவிழாக்கள் நடைபெறும். ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தனிவிழா சிறப்பாக நடைபெறுவதில் இறைவனுக்கேயன்றி இறைவிக்கும் வழிபாடு நடைபெறும். சித்திரைத் திங்கள் தொடங்கி, அடுத்த பங்குனி

வரையில் விழாக்கள் நடைபெற்றுப் பங்குனியில் பெருந்தேர்விழா நடக்கும். அவ்விழாக்களிலே அம்மனுக்கென்று சில விழாக்கள் நடைபெறும். அவைகளிலே ஆடி மாதம் பூர நட்சத்திரத்திலே உமையம்மைக்குச் சிறப்பாக விழா நடக்கும். மேலும் புரட்டாதித் திங்களில் நவராத்திரியில் உமையம்மை கொலுவும் சிறப்பாக இருக்கும். இவ்வாறாக உமையம்மையின் திருவிழாக்கள் பேரூரில் நடக்கையில் பெரும்பாலான அன்பர்கள் கூடி வழிபாடு செய்து மகிழ்வார்கள். மாதந்தோறும் நடைபெறும் விழாக்களேயன்றி வாரம்தோறும் வெள்ளிக்கிழமைகளில் விசேச பூசைகள் நடைபெறும். அம்மனுக்குச் செய்யும் அழகுகள் வெகு வசீகரமாக இருக்கும்.

எல்லோருக்கும் அப்பன் - இறைவன். அம்மை - இறைவி. அப்பன் - சிவபெருமான். அம்மை - சிவசக்தி. அப்பன் ஆண் வடிவில் (புருடன்) அம்மை பெண் வடிவில் (பிரகிருதி) இயங்குவார்கள். அப்போதுதான் உற்பத்தி தோன்றும் என்று நூல்கள் கூறும். நிறங்களை ஆராயுங்கால் அப்பன் பொன்வண்ணம், கதிரவனைப்போல் செவ்வொளி வண்ணம். அம்மை பச்சை நிறம். கண்ணுக்கு இனிய நிறம். அப்பனை நேரில் பார்க்க இயலாது. கண் கூசி மழுங்கி விடும். ஆனால் அம்மையோ மைந்நிறமாய், உலகினர்க்குச் சாந்த உருவாய் அருள் நிறைந்த சொரூபமாய்த் திகழ்வாள். ஆகவே அப்பனிடம் ஏகுவதற்கு அம்மையின் சாந்த அருளே உதவியாக இருக்கும்.

உலகில் எப்பொருளிலும் ஆண்தன்மையும், பெண்தன்மையும் உண்டு. இதனை விஞ்ஞானமும் ஒத்துக் கொள்கிறது. மின்சாரத்திலும் ஆண், பெண் கூறு உண்டு என்பர். இவ்விரண்டும் சேர்ந்தால்தான் ஒலி, ஒளி முதலியன ஏற்படுகின்றனவாம். அணுக்களிலும் இவ்விரு தன்மைகளும் ஒன்றையொன்று சுற்றிக் கொண்டே இருக்கின்றனவாம். அடியார்கள் இந்த நிலையைத் திருமுறைகளில் ஓதியுள்ளார்கள். அப்பர் சுவாமிகள் திருவையாற்றிலே,

**‘‘காதல் மடப்பிடியோடும் களிறுவருவன கண்டேன்’’**

என்றும், வாதவூரடிகள்,

**‘‘பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்’’**

என்று திருக்குளத்துக் காட்சியிலும் கண்டு கூறின உண்மை காணுங்கள்.

அம்மையே சக்தி அல்லது ஆற்றல். ஆற்றல் உயிர்த்தன்மையைத் தருவது. சாதாரண காலத்தில் அமைதியாகத் தோன்றும் ஆறு, மலையிலிருந்து விழுந்தால் எத்தனை சக்தியோடு விழுகிறது. அப்படி விழும்போது கற்களை உருட்டித் தள்ளும். அதனால் மின்சாரம் எடுத்து எப்படிப்பட்ட யந்திரமும் ஓட்டலாம். அதுபோல, அம்மை சும்மா இருக்கையில் கண்ணுக்கினிய அழகு வடிவத்திலிருந்து கருணை புரிவாள். தீமையை ஒழிக்க எண்ணி, மகிடாசூரனையும் சண்ட முண்டர்களையும் அழிக்க எழும்போது, அம்மனுடைய ஆற்றல் நம்மால் கருதக் கூடாத கோர உருவத்தை அடையும். சாந்த உருவத்தில் இருக்கையில் உமாதேவி. கோர உருவம் தாங்கினால் பத்திரகாளியாவாள். சாந்தமும் மிளிரும் இடம் அதுவே. பயங்கரமான ஆற்றல் தோன்றும் இடமும் அதுவே.

உலகில் தீமை மிகுதியாகி நன்மைகள் குறைந்தன. அறத்தை விட்டு மறத்தை கைப்பற்றினார்கள் ஆள்வோர்கள். நல்லவர்கள் துன்புற்றார்கள். தீயவர்கள் இன்புற்று ஆரவாரித்தார்கள். அப்போது தீமையை அழித்து நலத்தை நிலைநிறுத்த அம்மை தோன்றினாள். தீமைக்கு அறிகுறியாக மகிடாசுரன், சண்டமுண்டர், சும்ப நிசும்பர் தோன்றி பயங்கர செய்கைகளை விளைவித்தார்கள். அப்போது அம்மை தோன்றி, அவர்களை வதைத்து உலகில் நல்லறமாகிய சாந்தத்தை நிலைநிறுத்தினாள். மகிடாசூரனை வதைத்தபோது மகிடாசுரமர்த்தினி என்றும், சண்டமுண்டர்களை வதைத்தபோது சாமுண்டி என்றும், சும்ப நிசும்பர்களை வதைத்தபோது சகதாம்பிகை என்றும் பெயர்களையுற்றாள். ஆற்றல் என்ற பண்பைத் திருவுருவமாகக் கொண்ட அம்மை அப்போது இராசராசேசுவரி என்ற பெயரோடு போற்றப்படுகிறாள். இந்த வெற்றியின் பயனாகத்தான் நவராத்திரியின் இறுதியில் தோன்றும் விசயதசமித் திருநாள் கொண்டாடப்படுகிறது. உலகையே ஈன்றவள் அன்னை. ஆனாலும் என்றைக்கும் இளமை வாய்ந்த கன்னியாகவும் இருக்கிறாள். இந்த நிலை முரண்போலத் தோன்றும். சாந்தரூபி கோரரூபியாக மாறும்போது இந்த முரணும் வியப்பு அல்ல என்க. இதனையே தாயுமானவர்,

**''அகிலாண்ட கோடியீன்ற அன்னையே பின்னையும்**
**கன்னியென மறைபேசும் ஆனந்த ரூபமயிலே''**

என்று பாடுகிறார். இதில் கண்ட ஆழ்ந்த தத்துவத்தை ஆராய்ந்து அறிந்து கொள்ளுங்கள்.

திருப்பேரூரில் அம்மை பச்சையம்மையாகச் சாந்த வடிவில் அருள் செய்கிறாள். ஆனால் அதே ஊரில் தெற்குத் திக்கில் அவளே பயங்கர உருவில் அதிமூர்க்கம்மன் என்ற உருவத்தில் ஆள்கிறாள். இந்த இரண்டும் ஒரே அம்மனின் வெவ்வேறு நிலையினைக் காட்டுகின்றது அல்லவா! இத்தகைய ஆற்றல் வடிவமாக இலங்கும் அன்னையைப் போற்றிப் பணிவோமாக.

**பிறவாநெறிபுக் குழன்றிடுமென் கொடும் பேய்மனத்தைப்**
**பிறவாநெறியிற் புகுமாறருள்பிற வாநெறிப்பேர்**
**சிறவா நிற்குந்திரு வாதிபுரிமேற் சிதம்பரமா**
**நறவார் மலர்பொழில் சூழ்பேரை வாழ்பச்சை நாயகியே!**

*- பச்சைநாயகிமாலை.*

## பட்டிப்பிள்ளையார்

பட்டிப்பிள்ளையார் அல்லது பட்டி விநாயகர் என்ற திருப்பெயர் பேரூரில் கோயில் கொண்டிருக்கும் மூத்த பிள்ளையார் அல்லது விநாயகரின் பெயர் ஆகும். அப்பிள்ளையார் கோயில் பட்டிப் பெருமான் கோயிலிலிருந்து நொய்யலாற்றங்கரைக்குப் போகும் பாதையில் சிறிது மேற்கே தள்ளியிருக்கிறது. இக்கோயில் சில ஆண்டுகளுக்கு முன் நன்றாகச் செப்பன் இடப்பட்டு, இப்பொழுது தூய நிலைமையில் விளங்குகின்றது. இப்பிள்ளையார் எழுந்தருளியிருக்கும் கருவறையின் அடியில் நச்சுப்பொய்கை இருப்பதாக மக்கள் கருத்து. ஆனால் அக்கருத்துக்கு நூல் ஆதாரம் இல்லை. மகாபாரதத்துச் சரிதத்தோடு தென்னாட்டுத் தலங்களைக் சம்பந்தப்படுத்தினால் பெருமை ஏற்படும் என்ற எண்ணத்தினால் இந்தக் கருத்துத் தோன்றியிருக்கலாம். நொய்யலாற்றங் கரைக்கு வடக்கே சித்திரச் சாவடி நிலங்களுக்கு இடையே சில பண்டைய முதுமக்கட்டாழிகள் இருந்தன. அவைகளைப் பாமரமக்கள் பாண்டவர் குழிகள் என்று கதைகட்டி விட்டார்கள். அதுபோல இந்தக் கருத்தும் இருக்கலாமோ!

பேரூர்த் தலபுராணத்தின்படி பட்டிப்பிள்ளையார், பட்டி விநாயகர் இந்தத்தல விநாயகர் ஆவார். அவரை வழிபட்டுத்தான் ஏனைய மூர்த்திகளை வழிபட வேண்டும். அவரைப் புராண ஆசிரியர் வணங்கின கடவுள் வணக்கச் செய்யுள் இதில் எடுத்தெழுதப்படுகின்றது. அந்தத் துதியைக் கூறிவிட்டு இங்கே விநாயகருடைய பெருமை ஒருசிறிது கூறத் தொடங்குவாம்.

**கங்கையும் பனிவெண் டிங்களும் விரைத்த**
**கடுக்கையந் தொங்கலு மரவும்**
**தங்குபொற் சடையு முக்கணுந் தாதை**
**தாணுவென் றுணர்த்தமென் மலர்க்கை**
**அங்குச பாச மணிந்துவெற் புயிர்த்த**
**வாரணங் கன்னையென் றுணர்த்தி**
**வெங்கலி முழுதுந் துமித்தருள் பட்டி**
**விநாயகன் சேவடி பணிவாம்.**

*- பேரூர்ப்புராணம்*

முதலில் பட்டி என்பது பசுமாட்டுத் தொழுவம் என்று அறிய வேண்டும். அதன் முழுவிவரமும் பட்டிப் பெருமான் என்ற கட்டுரையில் காண்க. அப்பட்டி பேரூர்க்கண் தோன்றிற்று. அதில் எழுந்தருளிய மூர்த்திகளில் ஒன்று பட்டிப்பிள்ளையார் ஆகும். என்பதை உணர்ந்து கொண்டு மேலே செல்லுவோம். பிள்ளை என்றால் குழந்தை என்பது பொருள். 'ஆர்' விகுதி சிறப்பைக் காட்டுவது, பிள்ளையார் என்றால் சிறந்த குழந்தை என்பது பொருள். மனிதரில் பிள்ளை என்று வகுப்புப்பட்டம் வைத்துக்கொள்ளுவார்கள். ஆனால் செட்டியார், முதலியார் போலப் பிள்ளையார் என்று சேர்த்திக் கூறிக்கொள்ள மாட்டார்கள். ஏனெனில், பிள்ளையார் என்ற தனச்சிறப்புப் பெயர் இறைவனுடைய மூத்த பிள்ளைக்கே உண்டு. இறைவன் பற்பல காலங்களில் பற்பல திருவிளையாடல் செயல்களைக் கருதி, தன் அம்சத்திலேயே பிள்ளைகளைத் தோற்றுவித்தார். அவர்களில் விநாயகர், முருகன், வீரபத்திரன் என்பவர்கள் யானைமுக அசுரனையும், சூரபத்மனையும் அவனைச் சார்ந்த அவுணர்களையும் அழிக்கத் தோற்றுவித்தார். அவர்களில் பிள்ளையார் என்று தனித்து நிற்கும் சிறப்புப் பெயர் மூத்தபிள்ளையாராகிய விநாயகருக்கே உண்டு. பிள்ளையார் கோயில் என்று சொன்னால் விநாயகர் கோயிலைக்

குறிப்பிடுவோமேயன்றி, ஏனைய பிள்ளைகளின் கோயில்களை நாம் குறிப்பதில்லை. கேட்பவர்களும் பொருள் கொள்ள -மாட்டார்கள். இது உலக வழக்கு.

இனி, விநாயகர் என்ற சொல்லுக்கு இரண்டு பொருள் உண்டு.

1. நாயகன் இல்லாதவன்

2. விசேச நாயகன் என்பவைகள்.

முதல் பொருளில் தனக்குமேல் நாயகன் இல்லாதவன் என்று வரும். வி - என்ற எழுத்துக்கு இல்லை என்ற பொருளில் அது வந்தது. இரண்டாவது பொருளில் விசேசமான நாயகன் ஒரு சிறந்த நாயகன் என்றுவரும். இதில் வி - என்ற எழுத்துக்கு, சிறந்தது என்ற பொருள். உதாரணாக மானம் என்றால் அளக்கப்படுவது என்பது உணர்த்தும் வடமொழி. வி - சேர்த்து விமானம் என்றால் நன்றாக அல்லது சிறப்பாக அளக்கப்படுவது என்பது பொருள். ஒரு கோயிலில் மூலத்தானக் கருவறைக்கு விமானம் என்று பெயர். அதாவது கோயிலுள்ளே நன்றாக ஆக்கப்பட்டிருக்கும் கட்டடம் என்று பொருள். அதே பொருளில் விநாயகர் என்ற சொல் வரும். அதாவது தேவர் கணங்களுக்குத் தலைவன். அதாவது கணபதி, கணநாதன் என்ற பொருளில் வரும் மொழி.

இனி, நாயகன் என்ற சொல்லுக்குத் தலைவன் என்று பொருள். ஒரு பெண்ணுக்குக் கணவன் தலைவன். ஒரு வேலையாளுக்கு முதலாளி தலைவன். அதுபோல் உயிர்களுக்கு விநாயகன் தலைவன். ஆகவே நாயகன் எனப்படுவான். ஒரு பெண்ணுக்குக் கணவனும், ஒரு வேலையாளுக்கு முதலாளியும் உடல் பற்றித் தலைவர்கள். ஆனால், உலகத்து உயிர்களுக்கு விநாயகன் உயிர் பற்றித் தலைவன். ஒரு யானைப்பாகன் தனக்கு அடங்கி உள்ள யானையை மேடு, பள்ளம் கண்டு நல்ல வழியில் செலுத்துவான். அதுபோல, விநாயகர் உயிர்களை விருப்பு என்னும் மேடு, வெறுப்பு என்னும் பள்ளம் இவைகளை அறிந்து, நன்னெறி என்னும் நல்வழியில் செலுத்துவார்.

இவ்வாறு உயிர்களை நல்ல வழியில் செலுத்துதற்கு விநாயகர் கைக்கொண்டிருக்கும் ஆயுதங்கள் பாசமும் அங்குசமும் ஆகும். யானையை நடத்துகிற பாகனுக்கு அங்குசம் அவன் கையில் இருக்கும். ஆனால், விநாயகராகிய யானைக்கு அங்குசம் தன் கையிலேயே இருக்கிறது. இதற்குப் பொருள் தன்னை

அடக்குபவர் இல்லை. தானே மற்றவரை நடத்துபவர் என்பது. அதனால்தான் அவர் நாயகர் இல்லாதவர் என்ற பொருளில் விநாயகர் என்னப்பட்டார்.

இனி, விநாயகருக்கு அங்குசம், பாசம் என்பவைகளே அன்றி, மற்ற பொருள்களும் உண்டு அல்லவா? அவைகள் எவை என்று சிறிது கவனிப்போம். விநாயகருக்கு ஐங்கரன் என்றது மற்றொரு பெயர். அதாவது ஐந்து கைகளை உடையவன். அக்கைகளில் என்ன வைத்திருக்கிறார். என்ன செயலுக்காக அவைகளை வைத்திருக்கிறார் என்பதை ஆராய்வோம். அவைகளால் உயிர்களைக் காக்கிறார். முன்கைகள் இரண்டினில் உடைந்த கொம்பு தரித்திருக்கிறார். அதனால் கயமுகாசுரனைக் கொன்று தேவர்களைக் காப்பாற்றினார். மற்றொரு கையில் மோதகம் அல்லது தின்பண்டம் வைந்திருக்கிறார். அது தன் உணவிற்காக. ஐந்தாவது கை துதிக்கை ஆகும். அதில் ஒரு செம்பு ஏந்திக் கொண்டிருப்பார். அந்தச் செம்பில் நீர் மொண்டு தன் பெற்றோர்களாகிய அம்மையப்பர்களை நாடோறும் நீராட்டுவார். ஆகவே, ஐந்து கைகளாலேயே உயிர்களுக்கு, தேவர்களுக்கு, தமக்கு, தம்பெற்றோர்களுக்குத் தொண்டு செய்துகொண்டே இருக்கிறார். நாம் செய்கிறோமா?

இனி, விநாயகருடைய உருவத்தைப் பார்ப்போம். அது யானைத்தலை கொண்டது. உடலோ தேவ உடல். காலோ பூதக்கால். இதனை எந்தப் பிள்ளையார் உருவத்திலும் காணலாம். இது ஒரு விசித்திர சிருட்டி அல்லவா! எல்லாச் சிருட்டிகளிலும் ஒவ்வொரு பங்கு தன்னிடம் கொண்டிருப்பவர். மற்றும் ஆணுமல்ல, பெண்ணும் அல்ல, அலியும் அல்ல என்றும் கூறுவர். அவ்வடிவத்தில் மிகச்சிறப்பு உறுப்பு தலையாகும். யானை எல்லா மிருகங்களிலும் சிறந்த மூளை கொண்டது. அறிவுக்குச் சிறந்தது. அந்த உருவத்தைக் கொண்டதினால் விநாயகர் அறிவில் சிறந்தவர். மேலும் யானைத்தலை சித்திரித்துப் பார்த்தால் அது 'ஓ' என்ற வடிவில் தோன்றும். அதாவது, அவர் ஓங்கார வடிவில் அதன் சொரூபமாய் இருப்பார். ஓங்காரம் என்பது பிரணவாட்சரம். அவர் பிரணவ சொரூபி. ப்ர + நவ =பிரணவம். பிரணவம் என்ற வடசொல்லில் ப்ர - அடைமொழி. நவ - புதிது என்று பொருள். புதியதிற்குப் புதியது என்று கருத்து.

''பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியன்''

என்றார் வாதவூரடிகள் அப்படிப்பட்ட உருவம் படைத்தவர். விநாயகர் வரிவடிவிலும், ஒலி வடிவிலும் பிரணவத்தை ஒத்தவர் என்பர். வடிவினை உருவம் காட்டும் ஒலியினை ஆற்றல் காட்டும். இதனை ஒருசிறிது விளக்குவாம்.

விநாயகருடைய வரிவடிவம் யானைத்தலையை ஒத்துளது என்று மேலே கூறப்பட்டது. மற்றும் சிறிது கூர்ந்து பார்க்கும்போது, அது பிண்டத்தினுடைய உருவமுமாகத் தோன்றும் என அறியலாம். எந்தப்பிறவி எடுத்தாலும் கருப்பையில் இருக்கும்போது பிண்டம் முட்டை வடிவாக இருக்கும். குட்டிபோடும் உயிர்களின் கருவும் தலைபெரிதாகவும் உடல் வளைந்தும் 'ஓ' வடிவாக இருக்கும். நடப்பன, ஊர்வன, பறப்பன, நந்துவன முதலிய எல்லா உயிர்களிலும் பிண்டம் ஒரேவடிவாக இருத்தல் காணலாம். அது பிறவியின் முதன்மையைத் தோற்றுவிக்கிறது. அவ்வடிவம் விநாயகருக்கு இருப்பதே அக்கடவுள் முதலில் வணங்கப்படுபவர் என்பதைக் காட்டும்.

இனி, ஒலிவடிவை எடுத்துக் கொள்வோம்.''ஓ'' என்ற எழுத்து அ+உ என்ற இரு எழுத்துக்களின் கூட்டு என்று அறிவோம். அந்தவொலிதான் மூலப் பிரணவம். ஒரு சந்தைக்குப் போகும்போது, அங்கு பலர் பலவகை ஒளிகளும் ஒலிக்க, ஒன்று கூட்டித் தொலைவில் 'ஓ' என்ற ஒரே ஒலிதான் கேட்கும். அருகில் செல்லச் செல்ல வெவ்வேறு ஒலிகள் கேட்கும். அதனால் எல்லா ஒலிகளும் 'ஓ' என்ற ஒரு ஒலியிலே அடங்கும் என அறிகிறோம். ஆகவே 'ஓ' என்ற ஒலி மூல ஒலி ஆகும். குழவி வாய் திறந்து அழுதால் 'ஓ' என்ற ஒலிதான் கேட்கிறது. சில உயிர் வர்க்கங்களும் ஒலித்தால் 'ஓ' என்றுதான் கேட்கிறது. உடுக்கை அடித்தாலும் 'ஓ' என்றுதான் இறுதியில் கேட்கிறது. டமருகத்திலிருந்து நாதம் கிளம்பி 25 ஒலி எழுத்துக்கள் தோன்றின. அவைகளே பெருகி உலகில் வழங்கும் எல்லா மொழி எழுத்துக்களும் தோன்றின. இதனை, சிறந்த இலக்கணங்களே ஒத்துக் கொள்ளுகின்றன.

மேலும், வேதங்கள், திருமுறைகள் ஓதுவதற்கும் ஓங்கார ஒலியைக் கூறிவிட்டுத்தான் மற்றவற்றைக் கூறுவதும் வழக்கம். தமிழ்மறைகள் ஓதும்போது, முதல் பதிகத்து, முதல் பாசுரத்தில்,

**‘தோடுடைய செவியன்’**

என்று தொடங்குவதில் ‘தோ’-வில் உள்ள ஓங்காரமே தமிழ்மறைகளுக்கு முதன்மை. இறுதியில் உள்ள ‘ம்’ சேர்ந்தால் ‘ஓம்‘ ஆகின்றது. ஆகவே, திருமுறைகளும் ஓங்காரத்தில் அடக்கம். அந்த ஒலி வடிவமே விநாயகர் உருவத்தில் உள்ளது. ஆகவே அவர் முதல்வர்.

## வழிபாடு

பிள்ளையார் வழிபாடு முதலில் செய்துவிட்டு, வேறு காரியங்களைச் செய்வது நமது நாட்டு முறை. எல்லா நூல்களையும் தொடங்கும்போதும் பிள்ளையார் சுழி இட்டுப், பிறகு பிள்ளையார் துதி சொல்லித்தான் நூல் தொடங்குவார். பிள்ளையார் சுழி என்பது ஓங்காரத்தின் குறுகிய உருதான். எந்தக் காரியத்திற்கும் பிள்ளையார் வழிபாடு சிறந்தது. அதனைச் செய்வது மிகச்சுலபம். எந்த ஊரிலும் எந்த மூலையிலும் பிள்ளையார் கோவில் உண்டு. எந்த நதிக்கரையிலும் எந்தக் கால்வாய்க் கரையிலும் கிணற்றுக் கரையிலும் பிள்ளையார் கோயில் உண்டு. அது இல்லாத ஊரே இல்லை. ஆகவே, பிள்ளையார் வழிபாடு சுலபம். மற்றும் பிள்ளையார் வழிபாட்டிற்குப் பெருத்த செலவு இல்லை. தலையில் குட்டிக்கொண்டு கும்பிட்டால் போதுமானது. குட்டிக்கொள்ளுதல் வணக்கம் சொல்வதற்கு அடையாளம். வீடுகளில் வழிபாடு செய்யும்போது ஒருபிடி சாணம் வைத்து, அதனைப் பிள்ளையாராகப் பாவித்து வழிபடுவார்கள். ஆறாதாரங்களில் மூலாதாரத்தில் சாணம் உண்டு. ஆகவே அது மூலத்தைத் தெரிவிக்கிறது. பிள்ளையார் ஆன சாணம் புழு விழுவதில்லை. இந்தப் பெருமையை நேரில் கண்டுகொள்ளலாம். ஆகவே பிள்ளையார் பூசை மிக எளிது. எவரும் எப்போதும் எந்த இடத்திலும் செய்யலாம்.

இனி, பிள்ளையார் பூசை செய்தால் என்ன கிடைக்கும். பூசிப்பவர்களுடைய இடர் கெடும். இடர் என்றால் இடுக்கண். அது தொலையும். இதனால், பிள்ளையாருக்கு விக்னேசுவரன் (விக்னம் - இடர்) என்று பெயர். மக்கள் வாழ்வில் உயர்வே விரும்புவார்கள். உயர்வு உள்ளத்தின் பண்பு. அதுதான் ஊக்கமுடைமை. மக்கள் ஊக்கம் பெறுதலைத் தடுப்பது

இடுக்கண். அது ஒரு தடை. தெய்வத்தால், பொருளின்மையால், மெய் வருத்தத்தால் ஏற்படுவது. அந்த இடுக்கண்தான் இடர் என்பது. அதனை நீக்குபவன் விக்னராசன். இதனை, சம்பந்தர் அழகாகத் தேவாரத்தில் குறித்திருக்கிறார்.

**''வழிபடுமவர் இடர்கெட...''**

என்று அவர் அருளிச் செய்ததின் பொருள், வழிபட்டால் இடர் முழுதும் போகும் என்றுபொருள். அதுதான் பிள்ளையார் வழிபாட்டின் பயன்

இனி, வழிபாடு செய்யும்போது தமிழிலே பிள்ளையார் துதிகள் கூறிச் செய்யலாம். பண்டைய புலவர்கள் அருமையாகத் துதிகளை வைத்து விட்டுச் சென்றிருக்கிறார்கள். கபிலர் இரட்டை மணிமாலை, நம்பியாண்டார் நம்பி அருளிய திருநாரையூர் இரட்டைமணி மாலை, அதிரானடிகள் அந்தாதி இவைகளைப் படித்துத் துதிக்கலாம். மற்றும் பின்னாளில் ஏற்பட்ட எல்லா நூல்களிலும் முதலில் பிள்ளையார் வணக்கம் உண்டு. பட்டிப் -பிள்ளையாருக்குப் பேரூர்ப்புராணத்தில் அருமையாகப் பாடல் கூறின கடவுள் வணக்கமாக உண்டு. அதனைக் கூறி வணங்குவோமாக!

பேரூர் செல்லுகிற மக்கள் நொய்யலாற்றில் நீராடிவிட்டுத் திருக்கோயிலுக்குப் போகும் வழியில் உள்ள, பட்டிப் பிள்ளையாரை வணங்கிவிட்டு, வேறு வழிபாடுகளைச் செய்வார்கள். ஆக, அப்போது எப்படிப்பட்ட இடையூறும் நேரிடாது என்று அறிக.

***14.1.51***

## பட்டிக்குமரன்

பட்டிக்குமரன் அல்லது பட்டி முருகன் என்ற திருப்பெயர் திருப்பேரூரில் கோயில் கொண்டிருக்கும் இளைய பிள்ளையார், அல்லது சுப்பிரமணியக் கடவுளின் பெயராகும். அம்முருகப்பெருமான் கோயில், பேரூர்ப்பெருமான் கோயிலிலே பெருமான் மூலத்தானத்திற்கும், அம்மன் மூலத்தானத்திற்கும் இடையிலே மேற்கு சன்னதியாக ஏற்பட்டிருக்கிறது. மற்ற கோவில்களையும் மண்டபங்களையும் திருப்பணி செய்தவர்கள் இந்த முருகப்பெருமான் சன்னிதியைத் தற்கால முறைப்படி

எவரும் மாற்றிக் கட்டவில்லை. முந்திக் கட்டப்பட்டபடியே இருக்கின்றது முன் மண்டபமும் பூர்த்தியாகாமல் வெறும் மேடையாக இருக்கிறது. (தற்போது முன்மண்டபம் கட்டப்பட்டுள்ளது) இந்தக் கோயிலைக் கட்டினவர் பெயர் கன்னட மொழியில் அதன் சுவற்றில் எழுதப்பட்டிருக்கிறது. அது ''வீரய்யன் குமாரன் கங்காதரைய்யன் என்பார் தாது தனுசு 152'' ஆகும். ஆகவே இச்சன்னிதியும், அதை ஒட்டின பெருமான், அம்மை முதலிய சந்நிதிகளும் ஒரு வழிபாட்டின் நிமித்தம் அந்த அன்பர் ஏற்படுத்தியிருக்கக் கூடும். முருகன் சந்நிதியைப் பற்றித் தனியாகப் புராணம் யாதும் கூறவில்லை. முருகன் துதி மட்டும் பாயிரத்தில் இருக்கின்றது.

பட்டிப்பெருமான் இளைய பிள்ளையாரான முருகப்பெருமானின் பெருமையைப் பற்றி அன்பர்கள் அறிய விரும்புவார்கள் அல்லவா! தமிழில் கந்தபுராணம் ஒன்றேயன்றி, திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா முதலிய பல நூல்களிலும் முருகன் பெருமை கூறப்பட்டுள்ளது. மேலும், துதிகளாகத் திருப்புகழ், பிள்ளைத்தமிழ், பதிகம் முதலிய பிரபந்தங்களிலும் பெருமை கூறப்பட்டுள்ளது. அவைகளை அன்பர்கள் ஓதி உணர்ந்து கொள்ளக் கடமைப்பட்டுள்ளார்கள். பாராயண மந்திர நூலாகக் கந்தர் அனுபூதி, கந்தசட்டிக் கவசம் முதலிய நூல்கள் உண்டு. அடியார்கள் இந்நூல்களை நாள்தோறும் தவறாமல் ஓதி உய்வதுண்டு.

இனி, முருகப்பெருமானுக்கு 108 பெயர்களும் 1008 பெயர்களும் உண்டு எனினும், தமிழ்நாட்டில் சாதாரணமாக வழங்கும் பெயர்கள் முருகன், குமரன், கந்தன், ஆறுமுகன், சுப்பிரமணியன் என்பவைகளே. இவைகளில் முருகன் என்ற பெயர் சிறந்தது. அதற்கு அழகன் என்ற பொருள் உண்டு. அழகு மட்டுமே அன்றி தெய்வீகத் தன்மை, இளமை, நன்மை முதலியவைகள் கொண்டவன் என்று திருமுருகாற்றுப்படை கூறும் (தெய்வத்திள நலம்). அதனால் அவன் எப்போதும் இளமையுடன் அழகு சொட்டச் சொட்ட நன்மை செய்பவனாய், தெய்வீகத் தன்மையில் விளங்குபவன் என்பது கருத்து. குமரன் என்றால் இளம் புதல்வன் என்றுபொருள். சிவபிரானுடைய அருள் நோக்கினால் தோன்றினவன் அல்லவா! அவனே குமரன் ஆவான். கந்தன் என்றால் சேர்க்கப்பட்டவன் என்று பொருள்.

சிவபெருமான் அருள்நோக்கால் ஆறு பொறிகள் உண்டாக, அவைகள் ஆறு குழந்தைகளாகத் தோன்ற அம்மையார் அவ்வாறையும் எடுத்து அணைக்க, ஆறும் ஒரு குழந்தை வடிவாகத் தோன்ற, அவ்வாறு சேர்க்கப்பட்ட தன்மையினால் கந்தன் என்று வழங்கப்பெற்றான். ஆறு உருவங்களும் ஒரு உருவம் ஆன போதிலும் ஆறு முகங்களோடு விளங்கினபடியால் ஆறுமுகன் அல்லது சண்முகன் என்ற நாமத்தினால் அவன் குறிக்கப்படுகிறான். இனி, சுப்பிரமணியன் என்ற பெயரே தென்னாட்டில் தற்போது மிக அதிகமாக வழங்கிவரும் பெயர். சுப்பரம் என்றால் தூய்மை. மணியன் என்றால் மணிபோல் ஒளி பொருந்தியன் என்றுபொருள். தூய்மையான ஒளி பொருந்திய திருமேனி உடையவன் என்று கருத்து. முருகன் என்ற சொல்லின் வடமொழிப் பெயரே அது ஆகும். இனி, அவன் செய்த, கொண்ட ஒவ்வொரு விளையாட்டிற்கும் ஒவ்வொரு தனிப்பெயரும் உண்டு. அவைகள் பெயர்த்தொகைகளில் செய்யுள் வடிவங்களில் பாடப்படுவன. வழிபாட்டில் ஓதப்படுவன.

அவனுடைய திருவுருவம் மிகப் புகழ்பெற்றது. ஒவ்வொரு ஆலயத்திலும் காணலாம். பொதுவாக இரண்டு வடிவங்களில் காட்சி தருவான். ஒருமுக வடிவு, ஆறுமுக வடிவு. ஒருமுக வடிவு நின்ற கோலமாகவும், ஆறுமுக வடிவு மயிலின்மீது அமர்ந்த கோலமாகவும் சாதாரணமாகத் தோன்றும். இக்கோலங்களில் தனியாகவும் தேவிமாரோடு இருக்கவும் காணலாம். மூலத்தானங்களில் அன்றி, உற்சவர்களிலும் இவ்விதமாக, இரு கோலங்களும் காணமுடியும். எங்கும் இளமைக் கோலத்துடனே காணல் இயல்பு. திருமணக் கோலத்துடன் இருக்கும் உருவம், குழவிப்பருவம் நீங்கி வாலிபப் பருவம் அடைந்த நிலையில் இருக்கும்.

ஆண்டிக் கோலத்துடன் முதிர்ந்த உருவாகத் தோன்றுகிறார் என்று சிலர் கூறுவது தப்பு. ஆண்டவன் என்ற பெயரை ஆண்டி எனத் தப்பாக எண்ணிச் சிலர் மயங்கியதினால் அந்த எண்ணம் ஏற்பட்டுவிட்டது. பழனி ஆண்டவர் என்று கூற வேண்டுமேயொழிய, பழனியாண்டி என்று கூறுதல் சரியல்ல. முருகப்பெருமான் பழனியில் பாலசுப்பிரமணியத் திருவுருவத்தோடு விளங்குகிறார் என்று அறிய வேண்டும்.

முருகப்பெருமான் தனி உருவமாக இருக்கையில், கையில் வேல் அல்லது தண்டாயுதத்தைத் தாங்கியிருப்பார். வேல் ஞான சக்தியின் குறி. தேவிமாரோடு இருக்கையில், வலப்புறம் வள்ளியம்மையையும், இடப்புறம் தெய்வயானையோடும் இருப்பார். வள்ளியம்மை இச்சா சக்தியும், தெய்வயானை கிரியா சக்தியும் ஆவார்கள். ஆகவே, மூன்று சக்திகளோடு முருகன் எழுந்தருளி இருப்பான். மேலும், ஆறுமுகமும் பன்னிரண்டு கையுமாக இருக்கையில், ஒவ்வொரு முகமும் ஒவ்வொரு கையும் ஒவ்வொரு குறிப்பைக் காட்டி நிற்பன. அக்குறிப்புகளை, விரிவாகக் கந்தர் கலிவெண்பா, திருமுருகாற்றுப்படை, திருப்புகழ் முதலிய நூல்களில் கண்டுகொள்க. ஆனால், ஒரு குறிப்பை மட்டும் அன்பர்கள் நினைவுபெறும் பொருட்டு இங்கு எழுதுவோம். பன்னிரண்டு கைகளில் முன்னாள் இரண்டு கைகளும், பின்னால் பத்துக் கைகளும் இருப்பதைக் காண்போம். பின் பத்துக் கைகளும், பத்துப் படைகளை ஏந்தி நிற்க, முன் இருகைகள் வலதுகை மேல்நோக்க, இடதுகை கீழ்நோக்கி இருக்கக் காண்போம். மேல்நோக்கும் வலதுகை அபய ஹஸ்தம். அதாவது அன்பர்களுக்கு அடைக்கலம் தருவது. கீழ்நோக்கிய இடதுகை தன் அடிகாட்டும். அது வரதஹஸ்தம். அதாவது வரம்தருவது. ஒருகை அஞ்ச வேண்டாம் என்று சொல்ல, மற்றொரு கை வரம்தருகிறேன் என்றும் சொல்லும். மற்ற, பத்துப் படைகளும் துன்பம் போக்கி, இன்பம் தருபவை. தேவர்களுக்கும் மற்றவர்களுக்கும் பகைமையை நீக்கி, வாழ்வு தருபவை. அவைகளே இடையூறும் நீக்குபவை. அவைகளில் ஒன்று வெற்றிவேல் ஆகும். அதுவே ஞானவேல். ஆணவத்தை அழித்து அறிவைத் தருவது. அதனால் முருகப்பெருமானுக்கு, ''ஞான சக்தி தராய'' என்ற பெயரும் ஏற்பட்டது. முருகக்கடவுள் தூய்மையான தமிழ்க்கடவுள். பல்லாயிரம் ஆண்டுகளாக, ஆண் அழகுத் தெய்வமாகத் தமிழர் போற்றிவந்தார்கள். அழகுக்கு இயற்கையாக அமைந்த மலைச்சோலைகளான குறிஞ்சி நாட்டில் குன்றுகளின் குவட்டில் அவனை எழுந்தருளச்செய்து வழிபட்டு வந்தார்கள். இப்பொழுதும் அவன் வழிபாடு பெரும்பாலும் மலைகளிலேதான் காணப்படும். சமநிலங்களில் வழிபடும்போது அழகிய இடங்களிலேயே எழுந்தருளச் செய்வார்கள். அழகான மயிலே அவன் ஊர்தி. செருக்குப் படைத்த சேவலே அவன் கொடி. தமிழே அவன் மொழி. தமிழுக்கு அவனே தெய்வம். தமிழ்ப்

புலவருடனே அவன் நகையாடுவான். தமிழைக் கேட்க, அவன் மகிழ்வான். மிகப் பண்டைய நூலாகிய தொல்காப்பியத்திலேயே அவன் பெருமை சொல்லப்படுகிறது. மலையும் மலையடர்ந்த இடமே அவனுக்கு உகந்த நிலமாக அது கூறுகிறது. அவனே, தமிழை தமிழ்முனிக்குப் பொதிகையில் உரைத்தானாம். அப்படிப்பட்ட தமிழ்க் கடவுளைத் தமிழ்நாடு முழுவதும் காணலாம். வடநாட்டில் அவனுக்கு அத்துணைச் சிறப்பு இல்லை. அங்கே அவனுக்குத் தனிக்கோயில் இல்லை. தென்னாட்டில் அவனுக்குத் தனிக் கோயில்களும், தனி விழாக்களும் இருப்பதைக் காணுகிறோம்.

புராணங்களின் பிரபஞ்சத்திலே, தீமை மிகுதியாகி, நன்மை குறையுங்காலை, இறைவன் அருள்கூர்ந்து அவதரித்துத் தீமை விலக்கி, நன்மை ஓங்கச் செய்வாராம். முன்னொருகால் சூரபத்மர்கள் தோன்றி, வரங்கள் பெற்று மிகுந்த வலிமையுடையவர்கள் ஆகி, தேவர்களை வருத்தத் தொடங்கினர். தேவர்கள் இறைவனைச் சரணடைய, இறைவன் குமாரக் கடவுளை அருளினார். குமரன் கங்கையில் தோன்றியதினால் காங்கேயன் என்றும், கார்த்திகைப் பெண்களால் பாலூட்டப் பெற்றதினால் கார்த்திகேயன் என்றும், சரவணப் பொய்கையில் உதித்ததினால் சரவணபவன் என்றும் பெயர் பெற்றான். கயிலையில் திருவிளையாடல் புரிந்து, வீர மகேந்திர புரியில் இருந்த சூரபத்மர்கள் மீது போர்தொடுத்துப் 10 நாளில் வென்று சூரனை வேலால் பிளந்து, இருகூறாக்கி, ஒருகூறு மயிலாக அதனை வாகனமாகவும், மற்றொருகூறு சேவலாக அதனைக் கொடியாகவும் கொண்டருளினார். பிறகு, திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், திருஆவினன்குடி, திருவேரகம், திருத்தணிகை முதலிய குன்றுதோறாடல்கள், பழமுதிர்சோலை முதலிய ஆறுபடை வீடுகளிலும் எழுந்தருளி அன்பர்களுக்கும் காட்சியளிக்கிறார். இந்தப் படைவீடுகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு காரணமூர்த்தியாக இருக்கிறார். திருச்செந்தூரில் வெற்றி உருவம். திருப்பரங்குன்றில் தெய்வயானை திருமணக் கோலம். திருவாவினன்குடியில் இளமை உருவம். திருவேரகத்தில் உபதேச உருவம். திருத்தணிகையில் சினம் தணிந்த உருவம். பழமுதிர்சோலையில் அருள்புரியும் உருவம். இந்தத் திருவுருவங்களுடன் பெருமான் அருட்காட்சி தந்து கொண்டிருக்கிறார்.

*108* யுகங்கள் *1008* அண்டங்களை ஆண்ட சூரனின் அகந்தைக்கு அளவும் உண்டோ? அதனால் அவன் ஆணவசொரூபமாக இருந்தான். பெரும்போரில் தோல்வியுற்றுத் தன்னந்தனியாக நின்றபோது ஆணவம் போகவில்லை. முருகக்கடவுளை இவன் ஒரு குழந்தை என்று ஏசினான். முருகக்கடவுள் விசுவரூப தரிசனம் தந்தார். தந்தும் பயனில்லை. மானம் மெலிந்து மீண்டும் போர்புரிந்தான். அப்போதுதான் பெருமான் ஞானவேலால் அவனைத் தடிந்து அடிமையாக்கிக் கொண்டார். அப்போதுதான் அவன் ஆணவம் நீங்கியது. இதுதான் சூரனின் வதத்தத்துவம்.

வள்ளியம்மை வெறும் மானுடப்பெண். மும்மலங்கலால் சூழப் பெற்றவள். அவளைத் திருமணம் செய்ய எண்ணினபோது அவளுடைய மும்மலங்களையும் தன் ஞான திருட்டியால் போக்கி, அவளைத் தெய்வீகம் ஆக்கித் திருமணம் செய்துகொண்டான். வள்ளியம்மை உலக உயிர்கள் அல்லது பசுக்களுக்கு ஒரு உதாரணம். இறைவன் பசுக்களைத் தன் திருநோக்கால் மும்மலங்களினின்றும் நீக்குகிறான். அந்த ஞானோபதேசமே குருவருள். அது சிவஞானபோதம் எட்டாம் சூத்திரத்தில் கூறப்படுகிறது. அந்தத் தத்துவத்தைத்தான் வள்ளியம்மை திருமணம் நிரூபிக்கிறது.

முருகப்பிரானுக்கு மூன்று படைக்கலங்கள் உண்டு. அவை, வேல், மயில், சேவல் என்பன. அதனை அருணகிரிநாதர்

**‘‘ஆடும் பரிவேல் அணிசேவல்’’**

என அழகாக அனுபூதியில் கூறுகிறார். வேல் ஒரு சக்தி அல்லது ஆற்றல். அதுவே ஞான சக்தி. அதுவே வெற்றியாகிய முத்தி தருவது. அதுவே சூரனுடைய ஆணவத்தையும் போக்கிற்று. பசுக்களாகிய நமது ஆணவத்தையும் அதுவே போக்கக்கூடியது. வேலினுடைய பெருமையை வேல் வகுப்பில் அருணகிரிநாதர் வெகு விவரமாக உரைக்கிறார். அதனை எல்லோரும் படிக்க வேண்டும். வேலுக்குத் தனிப் பெருமை தென்னாட்டிலும் ஈழ நாட்டிலும் கொடுக்கப்படுகிறது. கொங்கு நாட்டில் மருதமலையில் மிகச்சிறப்பு பொருந்திய தலவிருட்சமாகிய மருதமே வேலின் அம்சமாகக் கருதப்படுகிறது.

சூலம், சக்கரம், சாரங்கம், கோதண்டம் முதலிய ஆயுதங்களைத் தம் பெயர்களாக மக்கள் இட்டுக் கொண்டால், 'பாணி' என்ற விகுதியைச் சேர்த்தியே கூறுவார்கள். ஆனால், வேல் மட்டும் தனிப் பெயராக மக்கள் இட்டுக் கொள்கிறார்கள். கதிர்வேல், வச்சிரவேல், மாணிக்கவேல், இரத்தினவேல் முதலான பல மக்கட்பெயர்களிலும் இந்தத் தனிப்பெருமை ஏன் உளதோ உணர்ந்து பாருங்கள்!

இனி, மயில் முருகனுடைய ஊர்தி ஆகும். அது ஒப்பற்ற அழகிய தோகை உடைய பறவை. மயில் நடை, மயிலின் ஆடல் இவைகளை வியக்காதார் யாரே உளர். மயிலுருக்கொண்டு தவம்புரிய யாரும் உடன்படுவராம். உமையம்மையே மயிலுரு எடுத்தாரென்றால், வேறு எவரே மயிலுருவைப் போற்றார். மயிலுருவின் மீது முருகக்கடவுள் ஏறிவரும் தோற்றம், கடலின்மீது செங்கதிரோன் உதயமாகும் தோற்றத்திற்கு நக்கீரர் உருவகப் -படுத்துகின்றார். வண்ணங்களில் அழகமைதி அத்தனை நேர்த்தியாக உள்ளது என்க.

சித்தாந்தத்தில் தத்துவங்கள் 36 என்பர். அவைகள் மண் முதல் 36 ஆகும். எல்லாவற்றிலும் உயர்ந்தது சிவதத்துவம். அதற்கு அடுத்ததாக இரண்டாவதாக உள்ளது நாதம். அதற்கு அடுத்தது விந்து. ஆகவே நாத விந்துக்கள் மிக மேலானபடியில் உள்ளவை என்க.

**''நாத விந்து கலாதீ நமோ நம''**

என்ற திருப்புகழ் கருத்தில் அது அமைந்திருத்தல் காண்க. இவைகளிலே, நாதம் என்பதன் உருவம் சேவல். விந்துவின் உருவம் மயில் என்பர். மயிலின் தலை சிறியது. உடல் பெருத்தது. தோகை மிகப் பெருத்தது. மாமரம் அடி சிறுத்தது. மேலே பெருத்தது. அந்த உருவம் எடுத்தான் சூரன். அவனே அழிந்து மயிலும் சேவலும் ஆனான். முருகன் அவற்றைக் கடந்தவன். அவனே கந்தழி. (கந்து + அழி) கட்டுப்பாட்டைக் கடந்தவன். சூரனை வென்று அவனைக் கட்டுப்படுத்தி மேலே நின்றவன். ஆன்மாவிற்கும் அப்படியே. சேவல் அவனுடைய கொடி. அது பறவைகளில் மிகப் பயன்தருவது. காலையில் எல்லோரையும் கூவி எழுப்புவது. எத்தனை இருட்டில் மூடிவைத்தாலும் காலை வரும் நேரத்தை அறிந்து உணர்த்துவது.

எல்லாரையும் அறைகூவி மக்களைத் தம் வேலையில் நிறுத்துவது. அப்படிப்பட்ட சேவல் அல்லவா முருகனுக்குத் தக்க கொடியாகும். அதன் பெருமை அறியாதவர்கள் அதைக்கொன்று அதன் உடலை உண்கிறார்கள்.

இவ்வாறாக, ஆடும் பரி(மயில்), வேல், அணி சேவல் இவைகளைக் கொண்ட முருகப்பெருமானின் பெருமைகளை நாம் உணர வேண்டாமா! நமக்கு அறிவைத் தந்து, தமிழை உணர்த்தும் பெருமான் அவன் ஒருவனே என்று அறிவோம். அவன் தாளை வணங்கி அவன் அருளைப் பெறுவோமாக!

## முருகக் கடவுள் வணக்கம்

**காமர் மல்கிய வுருவிஃ தன்றெனக் கருத்தின்முன் னுறத்தோற்றும்**
**காம னல்லுடல் பொடித்தகண் ணிடத்துமை கணவனார் நிகரில்லாக்**
**காமர் மல்கிய வுருவெனத் தோற்றிய காளையை யடியார்தங்**
**காம முற்றமிக் கருளுமங் குலிநகர்க் கந்தனைப் பணிவாமால்.**

*- பேரூர்ப்புராணம்*

## பேரூர் மூர்த்திகள்

இதுவரை, பொதுவாக முருகக் கடவுளைப் பற்றிக் கூறினோம். ஆனால் பேரூர் முருகனைப் பற்றிச் சிறப்பாகக் கூற வேண்டாமா? தீப்பேரூரில் மூன்று இடங்களில் முருகப் -பெருமானுடைய திருவுருவங்கள் காட்சி தருகின்றன. அவைகளில் ஒன்று பெருமான் சந்நிதி வாயிலுக்கு இடதுபுறமாக இருக்கும் மூர்த்தி. மற்றொன்று உட்பிரகாரத்தில் இடதுபுற மூலையில் இருக்கும் மூர்த்தி. மூன்றாவது வெளிப்பிரகாரத்தில் மேற்கு சந்நிதியாக உள்ள தனிக்கோயிலில் உள்ள மூர்த்தி. இத்தனிக்கோயிலைத் தண்டாயுதபாணி கோயில் என்பார்கள். இம்மூன்று மூர்த்திகளும் மூலத்தான மூர்த்திகள். இவைகளைத் தவிர, கனகசபையில் பெரிய அரிய கற்றூண்களில் ஒரு அழகிய மூர்த்தி இருக்கிறது. அது ஆறுமுக மூர்த்தி. மயில் வாகனத்தில் அமர்ந்துள்ளது. அதுமிக அரிய சிற்ப அமைதி பெற்றிருப்பது. அதன் அழகும் அரிய வேலைப்பாடும் வேறு எங்கும் காணமுடியாதது. இனி, உற்சவ மூர்த்தி பஞ்சலோகங்களால் ஆக்கப்பெற்றது ஒன்று கல்யாண மண்டபத்தில் உற்சவ மூர்த்தி மண்டபத்தில் எழுந்தருளி இருக்கிறது. இவைகளைக் கண்டு மக்கள் போற்றுவார்களாக!

## மருதமலை முருகன்

திருப்பேரூர்த் தலத்தைச் சுற்றியுள்ளது பேரூர் நாடு. அதில் மேற்கு எல்லையாக உள்ள மலைத்தொடர் அத்தலத்திற்குச் சேர்ந்தது. அதில் ஐந்து மலைகள் உண்டு. ஐயன், உமை, மால், முருகன், வெள்ளி என்பன அம்மலைகளின் பெயர்கள். அவற்றில் முருகன் மலை மருதமலை என்னப்படும். மருதமரம் தலமரமாக உள்ளதினால் அப்பெயர்பெற்றது. பேரூர்ப் புராணத்தில் இம்மலையின் பெருமை கூறப்பட்டுள்ளது. தேவர்கள் சூரராதிகளால் துன்புறுத்தப்பட்டகாலை, பெருமானை வழிபட அவர் அபயம் தந்து அவர்களுக்காக மருதமலையில் எழுந்தருளினார். தேவர்கள் அங்கே சென்றுபெருமானை வழிபட்டு வரப்பிரசாதம் பெற்றார்கள். அங்குள்ள மரமே வேலினுடைய அம்சம். மருதமலையின் பெருமைகளை இரண்டு படலங்களில் புராணம் கூறுகிறது. அதனைப் படித்து முழுவிவரம் தெரிந்து கொள்வோமாக! மருதமலை மிகச்சிறந்த திருமுருகனுடைய கோயில். மிக அழகான சுனை நீர் கொண்டது. ஆயிரக்கணக்கான மக்கள் சென்று வழிபடுவதுண்டு. அழகிய திருப்புகழ் உண்டு. திருப்பேரூர் முருகனுக்கும் திருப்புகழ் உண்டு. அவற்றைப் பாடித் துதிப்போமாக!

## பட்டிக்கூத்தர் - நடராசர்

பட்டிக்கூத்தர் திருப்பேரூர்க் கோயிலிலே மிகச்சிறந்த மண்டபத்தையும் அழகிய விமானத்தையும் கொண்டதும், தெற்குநோக்கி விளங்கி இருப்பதுமான கனகசபையிலே எழுந்தருளி இருக்கும் நடராசப் பெருமான் ஆவார். இம்மூர்த்தியின் திருப்பெயர் பேரூர்க் கோயில் கல்வெட்டில் 'கூத்தாடு தேவர்' என்ற சிறப்புப் பெயரால் குறிக்கப்பட்டுள்ளது. கூத்து என்ற தமிழ்ச்சொல் இக்காலத்தில் 'நடனம்' அல்லது 'நர்த்தனம்' என்ற வடமொழியின் விளக்கமாக வழங்குகிறது. நடனக் கலை இப்போது நாட்டியக்கலை என்ற சொல்லால் வழங்குகிறது. நடனம் ஒரு சிறந்த கலை என்று தமிழ்மக்கள் அறிந்திருந்தார்கள். அதைப்பற்றிப் பண்டைய நாளில் தமிழிலே பல அரிய பெரிய நூல்கள் இருந்தன. அவைகள் இப்போது கிடைக்கவில்லை. அதனை வடநாட்டார் பரதநாட்டியம் என்பார்கள். வடநாட்டில் பரதநாட்டியம் வழங்கப்பட்டாலும், சிறப்பாக அந்தக் கலை

தென்னாட்டுக்கே உரித்தானது. அதனை இயற்றும் தெய்வமாகிய நடராசரும் தென்திசை கடவுளே. இன்றைக்கும் தென்னாட்டில் உள்ள நடராச உருவம்போல் ஒன்றும் கூட வடநாட்டில் இல்லை. உலகிலேயே வேறு எவ்விடத்திலும் இயற்றப்படவும் இல்லை.

திருப்பேரூரிலே எழுந்தருளியிருக்கும் நடராசர் திருவுருவம், மிகச்சிறந்த வடிவம். இதைப்போல் உள்ள மற்றொரு உருவம் கிழக்கே சோழநாட்டிலே, தில்லைச் சிற்றம்பலத்தேதான் உண்டு. அவ்வாறு சிறந்த உருவம் இங்கேயும் அமைந்திருந்ததினால் பேரூருக்கு 'மேலைச்சிதம்பரம்' என்ற பெயரும் வழங்கத் தொடங்கிற்று. ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்னர், கிழக்கே நடுநாட்டில் தோன்றிய சுந்தரமூர்த்திகள் கொங்கு நாட்டை விஜயம் செய்து இறைவனை வழிபட்டுக் கொண்டு செல்கையில் பேரூர் வந்து சேர்ந்தார். அங்கே இறைவனுடைய திருக்கூத்தைக் கண்டு மகிழ்ந்து போற்றினார். திரும்பிக் கீழ்நாடு சென்றபோது, தில்லைச் சிற்றம்பலத்தே பெருமானின் திருக்கூத்தைக் கண்டு போற்றினார். அப்போது அப்பெரியார் நெஞ்சில், தான் பேரூரில் முன்னர்க் கண்ட திருவுருவின் அழகிய தோற்றம் தோன்றிற்று. உடனே, தான் அருளிச் செய்த கோயில் திருப்பதிகத்தில் அந்த நினைவை ஊட்டி,

**''....மீகொங்கில் அணிகாஞ் சிவாய்ப்**
**பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற்**
**றம்பலத்தே பெற்றா மன்றே''**

என்று வியந்து பாடினார். இப்பாடலில் 'மீகொங்கு' என்றால் மேற்குக் கொங்கு. காஞ்சிவாய் என்றால், காஞ்சிமாநதி என்ற நொய்யல் கரையில் இருக்கிற, புலியூர் என்றால் சிதம்பரம் என்று அறிய வேண்டும். அவ்விதம் சுந்தர மூர்த்திகள் வேறு எந்த நடராசரையும் புகழ்ந்து பாடவில்லை. அவர் நெஞ்சில் பேரூரர் பெருமானின் அருமையான உருவமும், தில்லைக் கூத்தரின் அரிய உருவமும் ஒன்றாக விளங்கின என்று அறிய வேண்டும்.

பேரூர்ப் பெருமானின் கூத்தாடும் உருவம் மிகவும் அழகியது என்று எவரும் அறிவார்கள். பெருமானை நன்றாக நோக்க வேண்டும் என்றால் ஆண்டுதோறும் நடைபெறும் ஆறு அன்னாபிடேகக் காலங்களிலும் காணலாம். பெரிய உருவம் மிகச்சிறந்த வேலைப்பாடு. எப்போதும் புன்னகை மலர்ந்த

திருமுகம். இயற்கை அழகு தோன்றும் அவயவங்கள். மிகப் பளுவான ஆகிருதி. சப்பரத்தில் வைத்து நூற்றுக்கணக்கான பேர் எடுத்தாலும் அமிழ்த்த கூடிய கனம் உடையவர். பங்குனி மார்கழித் திருவிழாக்களில் முழுமதியின்போது, அவர் வெளிவந்து தரிசனம் தருவார். அப்போது, ஆவேசம் வந்ததென மக்கள் போற்றுவார்கள். நூற்றுக்கணக்கான பேர்கள் சப்பரத்தை எடுத்தும் பல தட்டைகள் (வாரைகள்) உடைந்து போகும். அந்தக் காலங்களில் மூர்த்தியின் திருக்கோலம் வெகு அழகாக இருக்கும். புதுப்புது மலர்களாலே அலங்கரிக்கப்பட்ட திருமேனி வெகு கம்பீரத்தோடு காட்சி தரும். மல்லிகை, முல்லை, குலாபி, தாமரை, மாதுளம்பழ விதை முதலான பொருள்களால் இணைக்கப்பட்ட பல மாலைகள் அணிந்து கொண்டு வெளிவருவார். அந்தக் காட்சி காண பல்லாயிரம் மக்கள் கூடிவந்து, விடிந்தது முதல் காத்துக்கொண்டு இருப்பார்கள். அதிசயக் காட்சி அருளும் பெருமானின் திருவுருவத் தத்துவப் பொருளை நாம் அறிய வேண்டாமா?

பேரூரில் எழுந்தருளி இருக்கும் ஆண்டவன் பட்டிப் பெருமான் அல்லது பட்டித் தலைவன். அப்பட்டியில் உள்ள பசுக்கள் நாம். அவனோ பசுக்களாகிய நமக்குத் தலைவன். அல்லது பசுபதி. பசுக்கள் தம் தலைவனை அறிய வேண்டும். ஆனால் அவனோ அறிய முடியாதவன் என்று நூல்கள் கூறும். அவனை அறிய நாம்

1. நினைக்க வேண்டும்(தியானம்).
2. வழிபட வேண்டும்(பூசை).
3. வாழ்த்த வேண்டும்(வந்தனை)

இம்மூன்று செயல்களால் மட்டும் அவனை அடையலாம். இம்மூன்று செயல்களையும் இறைவனிடத்தில் செய்யும் பொருட்டு, அவன் மூன்று திருமேனிகளை நமக்காகத் தாங்கி வருகிறான். அம்மேனிகள்

1. அருவம்
2. அருவுருவம்
3. உருவம் என்பன

அவைகளிலே அருவம் நாம் கண்ணால் காண முடியாதது. அதனை நினைத்தலால் அல்லது தியானம் செய்வதால்

அறியலாம். அதனைச் செய்ய யோகியர்களால்தான் முடியும். இனி, அருவுருவம் என்பது சிவலிங்கம். இதற்கு உருவம் உண்டு. ஆனால் அவயவம் இல்லை. ஆகவே உருவமும் அருவமும் கொண்டது. இதனை வழிபாட்டு வகையில் அல்லது பூசை வகையில் அறியலாம். பூசை என்றால் (பூ - போவது; ஜா - உண்டாவது) மலம் போக்கி இன்பம் உண்டாக்குவது என்பது பொருள். இனி, உருவம் என்பது நாம் வாழ்த்துதற்கு ஏற்பட்ட திருமேனி. அதுதான் நடராச உருவம். இன்னும் பல உருவங்களை இறைவன் எடுத்து இருக்கிறான். அவற்றில் சிறந்தது நடராசர் உருவம். அத்திருவுருவத்தில் நாம் காணும் ஒவ்வொரு அமைதியும் ஒவ்வொரு தத்துவத்தை விளக்குகிறது. ஆண்டவன் நமக்காக ஐந்து தொழில்களைச் செய்கிறான். உலகத்தைப் படைக்கிறான். அதனைக் காப்பாற்றுகிறான், சங்கரிக்கிறான், இளைப்பாற்று -கிறான், அருளுகிறான். இவைகளை ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பார்கள். இந்த ஐந்துதொழில் கூத்து அல்லது விளையாட்டே நடனம் என்று சொல்லப்படும். இதனைச் செய்பவனே நடராசன். அவன் திருவுருவத்தில் இவற்றைக் காணுகிறோம்.

நடராச உருவத்தை நன்கு பாருங்கள். அதில் நான்கு கைகள், இரண்டு கால்கள் உண்டு. கைகளில் ஒரு கை வலத்திலே தூக்கி நிற்கும். வலது கையில் உடுக்கை (டமருகம்) இருக்கும். உடுக்கை ஒலி செய்வது. அவ்வொலிதான் எழுத்துக்களையும் பேச்சையும் உண்டாக்குவது. அது நாதம் என்னப்படும். நாதமே உலகத் தோற்றத்திற்குக் காரணம். ஆகவே, இந்தக் கை உலகத்தை ஆக்குவது அல்லது சிருட்டிப்பதைக் காட்டும்.

வலத்திலே மற்றொரு கை அபயக்கை என்பது. அபயம் என்றால் பயம் இல்லை என்று பொருள். அக்கை உயிர்களை நோக்கி, ‘‘நான் இருக்கிறேன். உங்களுக்கு பயம் ஏன்?’’ என்று கூறுகிறது. அஞ்ச வேண்டாம் என்று கூறுகிறதே காப்பது ஆகும். இக்கை திதி என்ற தொழில் செய்கிறது.

இடதுபுறத்திலேயும் ஒரு கை தூக்கி நிற்கும். அதில் தாங்கி உள்ளது நெருப்பு. நெருப்பு எதையும் எரித்து அழித்துவிட வல்லது. அது எல்லாவற்றையும் அழிப்பேன் என்று கூறுகிறது. அது சங்காரம் என்பது ஆகும். இம்மூன்று கைகளும் சிருட்டி, திதி, சங்காரம் என்ற முத்தொழில்களைக் காட்டுகின்றன.

இனி நடராசனுடைய கால்களைக் கவனியுங்கள். வலது பாதம் ஊன்றி இருக்கும். இடது பாதம் தொங்கிக் கொண்டிருக்கும். ஊன்றி இருக்கும் பாதம் ஒரு அரக்கனுடைய உருவத்தை மிதித்துக் கொண்டிருக்கிறது. அரக்கனுடைய உருவமோ தலைநிமிர்ந்தும், உடல் திருகியும், கால்கள் மற்றொரு விதம் திருகியும் இருக்கும். இம்மூன்று திருகலாக இருக்கும் உருவத்திற்கு முயலகன் என்று பெயர். அவனை அடக்கி இளைப்பாறச் செய்ய வைக்கிறது ஊன்றிய பாதம். உலகிலே போகங்களை உண்டு ஆடி இளைத்த, உயிர்களைத் தன் கீழ் அமிழ்த்தி வைத்து இளைப்பாறச் செய்வதே திரோபவம் என்ற மறைக்கும் தொழில். வெகுநேரம் விளையாடி இளைத்துப் போயும் மறுபடியும் தன்னை அறியாது, தனக்குத் துன்பம் வருமாறு மேலும் மேலும் ஆட்டமே விரும்பி அலைகின்ற பிள்ளையைத் தந்தை இழுத்து வந்து தன்னிடம் உட்கார வைத்து அவன் தப்பி ஓட மறுபடியும் ஆட்டம் போட்டுக் கெடாதபடி அவன்மேல் ஒரு துடையும் வைத்து அமர்த்திக்கொள்வதுபோல் உள்ளது திரோபவம் என்ற தொழில். இதை ஆணவம் மிகுதலால் தலை நிமிர்ந்து காட்டும் உருவம் கொண்ட முயலகன் இடத்தில் இறைவன் காட்டுகிறான்.

இனி இருப்பன, இடது கையும் இடது காலும் ஆகும். தொங்க வைத்து வலதுபுறமாக வீசி, நீட்டி இருப்பது மற்றொரு இடதுகை. அதன்கீழ் மற்றொரு இடதுகால் தூக்கி வளைந்து வலதுபுறமாக நீண்டு இருக்கும். அந்த இடதுகை நீட்டிய இடது காலைக் காட்டிக் கொண்டே இருக்கும். இந்தக் காலுக்குக் குஞ்சிதபாதம் என்று பெயர் (குஞ்சிதம் × வளைந்தது). இந்தக் கால் மீளா இன்பமாகிய முத்தி நிழலைத் தந்து உயிர்களை அனுக்கிரகிப்பது ஆகும். அதுதான் அருள் செய்யும் ஐந்தாவது தொழில். ஆகையால் அந்தக் காலுக்கு ஒரு தனிமாலையும் போடுதல் வழக்கம். அக்கால் அனுக்கிரகம் செய்கிறது என்று, ஒருகை காட்டிக் கொண்டே இருக்கிறது. இந்த ஐந்து தொழில்களையும் செய்யும் திருவுருவமே நாம் வந்திக்கத்தக்கது ஆகும் அல்லவா! அந்த ஐந்து தொழில்களையும் எடுத்து உரைக்கும் பாடல்,

**தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்**
**சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமா**
**ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம்முத்தி**
**நான்ற மலப்பதத்தே நாடு.**

என்பதாகும். மேலும் ஐந்து எழுத்தின் தத்துவமும் அவ்வடிவத்தில் உண்டு. அதனை நூல்களில் படித்துக்கொள்க. இனி நடராசர் உருவத்தைச் சுற்றித் திருவாசி என்ற பிரபாவலி அழகு செய்வதைக் காணலாம். அவ்வாசி ஓங்காரத்தின் வடிவமாக அமைந்திருக்கும். ஆகவே ஓங்காரம் என்ற பிரணவத்தின் உள்ளிருந்து ஆண்டவன் கூத்தாடுகிறான் என அறியலாம். அக்கூத்தின் வகைகள் பல உண்டு. அவற்றின் விவரங்களைத் திருமந்திரத்தில் ஆராய்ந்து கொள்க.

ஆட்டம் உயிர்; ஆட்டம் இல்லாதது பிணம். இறைவன் ஆட உயிர்கள் ஆடும்; உலகம் ஆடும். அக்கருத்தை நடராசக் கோலம் உணர்த்துகிறது. மேற்கு விஞ்ஞானமும் எல்லா அணுக்களும் கூத்தாடிக் கொண்டே இருக்கின்றன என்று கூறும். அணு ஆட, உலகம் ஆட, அண்ட பிண்டங்கள் ஆடுகின்றன. அந்தத் தத்துவத்தையே கூத்தக் கடவுள் உணர்த்துகிறான்.

இனி, பேரூர் நடராச உருவம் மிகச்சிறப்புப் பெற்ற உருவம். அதன் காலில் அணிந்துள்ள சிலம்பு உருவத்திலே வார்க்கப்பெற்றது. திருமேனி மிகுந்த அழகு வாய்ந்த சிற்பக்கலை.

நடராசன் வடிவம் உலகில் உள்ள எல்லா வடிவங்களிலும் சிறந்த கருத்துக் கொண்டதென சிற்பநிபுணர்கள் ஒத்துக் கொள்கின்றனர். அத்திருவுருவினை வாழ்த்தி நாம் உய்வோமாக.

*1.2.51*

## பட்டித் திருமால்

பட்டித் திருமால் என்ற பெயர் பேரூரில் எழுந்தருளி இருக்கும் திருமால் அல்லது பெருமாளின் பெயராகும். ஒவ்வொரு சிவாலயத்திலும் திருமால் கோயில் ஒன்று இருக்கும். அதுபோலப் பேரூரிலும் திருமால் கோயில் ஒன்று இருக்கிறது. அம்மன் கோயிலில் சன்னிதிக்கு ஈசான திசையில் பெருமாள் எழுந்தருளி இருக்கிறார். அவருக்குத் தனிப்பூஜையும் அர்ச்சகரும் உண்டு. திருமால் அம்மனின் உடன்பிறப்பு அல்லவா! இறைவனுக்கு மைத்துனன் முறையில் இருப்பவர். ஆகையாலே இறைவன் திருக்கோயிலிலே எழுந்தருளி இருக்கும் உரிமை பெற்றவர் ஆகிறார். சில பெருங்கோயில்களிலே திருமாலுக்குத் தனிக்கோயில்களும் கருவறையும் உற்சவங்களும் உண்டு.

பேரூரிலே அவ்வாறு இல்லை. வழிபாடு செய்வதற்கு மட்டும் தனி அர்ச்சகர் ஒருவர் இருக்கிறார். அன்பர்கள் அம்மனை வணங்கிவிட்டு வெளியே வரும்போது, திருமாலை வணங்க வருவார்கள். அப்போது ஆராதனை செய்துவிட்டு அர்ச்சகர் திருத்துழாயும் தீர்த்தமும் தந்து சடகோபம் சாத்துவார். இந்தச் சாத்துமுறை மட்டும் இத்திருமால் கோயிலில் நடைபெறுகிறது.

பேரூரிலே பெருமாளுக்குத் தனிக்கோயில் இப்போது காணாமல் போனபோதிலும் முந்நாளிலே மிகப்பெரும் கோயில் இருந்ததாகச் செப்பேட்டுச் சான்று இருக்கின்றது. ஓராயிரம் ஆண்டுகளுக்கு முந்தி, பாண்டிய நாட்டை ஆண்ட, மாறன் சடையன் என்ற பெரும் பாண்டிய மன்னன் கொங்குநாட்டின் மீது படையெடுத்து, பேரூர் புகுந்து திருமாலுக்கு ஒரு சிறுமலை போல ஒரு கோயிலை ஆக்கினான். இதனை அவனுடைய செப்பேடு கூறுகிறது. அச்செப்பேட்டை இப்பொழுதும் சென்னைக் கண்காட்சிச் சாலையில் காணலாம். அந்தப் பாண்டியன் ஒரு பரம வைணவன். மதுரகவியாழ்வார் அப்பாண்டியனுக்கு அமைச்சராக இருந்தனர் என்று ஆராய்ச்சி கூறுகிறது. அந்தச் செப்பேட்டில்,

**‘‘காஞ்சிவாய்ப் பேரூர் புக்குத்**
**திருமாலுக் கமர்ந்துறையக்**
**குன்ற மன்னதோர் கோயிலாக்கியும்**
**ஆழி முன்னீர் அகழாக**
**அகல் வானத் தகடுரிஞ்சும்**
**பாழி நீண்மதில் பரந்தோங்கும்**
**பகலவனும் அகலவோடும்’’**

என்று கண்டிருக்கிறது.

ஆனால், இக்குன்றம் அன்னதோர் பெருங்கோயில் இப்போது எங்கு போயிற்று. ஆனால் ஒரு கர்ணபரம்பரை வரலாறு வழங்கி வருகிறது. பேரூர்த் திருக்கோயிலுக்குத் தென்கிழக்கிலுள்ள அழகான தெப்பக்குளம் ஆக்கப்பட்டதற்கு முன்னர், அதே இடத்தில் அப்பெருங்கோயில் இருந்ததாகவும் அது நாளாவட்டத்தில் அழிந்து போனதாகவும், அதன் மூல விக்ரகம்தான் தற்போது தெப்பக்குளத்திற்குத் தென்கரையில் வெட்ட வெளியில் வைத்திருப்பது என்றும் கூறுவர். இது

மிகப்பண்டைய சிலை என்பது அதை தட்டிப் பார்த்தாலே தெரியவரும். அது வெண்கலம் போல ஒலிக்கும். அச்சிலா உருவத்தின் பெயர் இலட்சுமி நாராயணப்பெருமாள் என்பது. இந்த ஆலயம் 650 ஆண்டுகளுக்கு முன்பு இருந்திருக்க வேண்டும். பிறகுதான் அழிந்திருக்க வேண்டும். ஏனெனில் அப்போது ஆண்ட ஹொய்சாள வீர வல்லாளன் (கிபி.1292) என்ற அரசனுடைய கல்வெட்டு இம்மூர்த்தியின் பெயரைக் குறிக்கிறது.

மற்றொரு வரலாறும் கூறப்படுகிறது. 15 ஆம் நூற்றாண்டில் கொங்குநாட்டின் பெரும்பகுதிகளை தெற்கணாநம்பி அரசர்கள் ஆண்டு வந்தார்கள். அப்போது தெற்கணாநம்பி சங்கராயன் மகன் மாதையன் என்ற அமைச்சன் திருப்பேரூருக்கு வந்து திருப்பணி செய்திருக்கிறான். அவன் செய்த திருப்பணி இப்போது இருக்கும் அழகிய தெப்பக்குளமே ஆகும். இந்தப் படிகளில் 16 மூலைகளில் அவருடைய பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. அது தமிழிலும், கன்னடத்திலும் உண்டு. அவன் முந்தி இருந்து பாழாய்ப்போன திருமால் கோயில் கற்களைக் கொண்டு இத்திருக்குளமும், அதன் கீழ்க்கரையில் தன்பெயரால் ஒரு சிவாலயமும் (மாதேசுவரம்) கட்டினானாம். இவைகளை இப்போதும் காணலாம். திருமால் தன் இருப்பிடத்தை மைத்துனர்க்கு அளித்து விட்டுத் தன் உடன் பிறந்தாள் இல்லத்திற்குக் குடிசென்றனர் போலும்! ஆகவே தனிக்கோயிலில் குடிகொண்டு இருந்த திருமாலை இன்றைக்கு அம்மனுடைய ஆலயத்தில் வடகிழக்கு மூலையில் ஒரு சிறு உள்ளில் வீற்றிருக்கக் காண்கிறோம். இந்தத் திருமாலின் தத்துவங்கள் சிலவற்றைக் கூறுவோம்.

இறைவனுடைய ஐந்து தொழில்களில் ‘அளித்தல்’ என்பது இரண்டாம் தொழில். அதனைத் ‘திதி’ என்பார்கள். திதி என்றால் நிலை என்ற பொருள். அதாவது, உயிர்களை நிலைக்கச் செய்தல் அல்லது பாதுகாத்தல் என்பது. அதனைச் செய்வது திருமால். ஆகவே, திருமால் காப்புத் தெய்வம் என்க. ஒரு மன்னன் தன் குடிகளை எவ்வாறு காப்பானோ அதுபோலத் திருமால் எல்லா உயிர்களையும் காப்பான் என்க. ஆழ்வாரும்,

**‘‘திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே’’**

என்று ஓதினார். ஆகவே, திருமால் உயிர்களுக்கு எல்லாம் மன்னர்பிரான் என்று வழிபட வேண்டும்.

ஒரு மன்னனுடைய தொழில் இரண்டு வகை. தீங்கு செய்பவரைத் தண்டித்து நன்மை செய்வோரைக் காப்பாற்றுவது. இவ்விதம் செய்வதில் மறத்தை நீக்கி, அறத்தைப் போற்றுதல் ஏற்படும். இத்தொழிலைத் திருமால் எப்போதும் செய்து கொண்டிருக்கிறார். இதனைக் கண்ணன் அருளிய கீதையில் அடியில் கண்டவாறு சிறப்பாகக் கூறியிருக்கிறது.

**அறந்தளரும் அக்காலம் எக்காலம் அங்கே**
**மறங்கிளர்ந்து பாவம் வளரும் - பிறங்கரசர்**
**வெந்நைத் தருவிக்கும் வில்விசயா அக்காலத்**
**தென்னைப் பிறப்பிப்பன் யான்.**

**நல்லவர்கள் தம்மை நலம்புரிந்து காத்தற்கும்**
**பொல்லாரைப் பொன்றுநெறி போக்கற்கும் - சொல்லாரும்**
**முந்தை அறநாட்ட முய்த்தற்கு நான்பிறப்பன்**
**இந்தவுகந் தோறும் இசைந்து.**

இந்தக் கருத்தின்படி, திருமால் உலகில் நல்லாரைக் காப்பதற்கும் பொல்லாரைப் போக்கற்கும் ஆதியிலிருந்து அந்தம்வரை பத்துத் தடவை பிறக்கிறான். அவைகள் அவதாரங்கள் என்றுகூற முடியும். விபரங்கள் கூறுவோம்.

1. மச்சம் - (மீன்) வேதங்களைத் திருடின அவுணர்களைக் கொன்று மீட்டினது.
2. கூர்மம் - (ஆமை) கடல் கடைந்தபோது மந்திரக் கிரியைத் தாங்கி நிறுத்தித் தேவாசுரர்களைப் பிழைப்பித்தது.
3. வராகம் - (பன்றி) இரண்யாட்சனைக் கொன்று பூமியை வெளிப்படுத்திக் காப்பாற்றியது.
4. நரசிங்கம் - (மனித சிங்கம்) இரணிய கசிபுவைக் கொன்று, பிரகலாதனைக் காப்பாற்றியது.
5. வாமனம் - (குள்ளன்) கர்வம் மிகுந்த பலிச் சக்கரவர்த்தியை அடக்கினது.
6. பரசுராமன் - கொடிய அரசர்களை அடக்கினது

7. தயரத ராமன் - இராவணாதியரை வதைத்து முனிவரைக் காத்து, சீதையை மீட்டினது.

8. கிருஷ்ணன் - கஞ்சன் முதலியரை வதைத்துப் பாண்டவரைக் காத்தது.

9. பௌத்தன் - உயிர்ப்பலியை நிறுத்தித் தருமத்தைப் பிற நாடுகளிலும் நாட்டினது.

10. கல்கி - கலியுக முடிவில் தோன்றி, கலியை வென்று நன்மையை நாட்டுவது.

இந்த வகை ஒன்பது அவதாரங்கள் முன்னாளில் காலாகாலங்களில் தோன்றி, தீமை ஒழித்து நன்மை நிலைத்தல் அருளப்பட்டுள்ளது.

இனி, ஏற்படப்போவது பத்தாவது அவதாரம். அது கலியுக இறுதியில் நடைபெறுவது. தென்னாட்டில் பௌத்த அவதாரத்திற்குப் பதிலாக பலராம அவதாரத்தைக் கூறுவர். இந்த முறையைக் கவனித்தால் எள்ளளவு கீழான உயிர் முதலாக, உயர்ந்த மானுட உருவம் வரையில் அவதாரம் தோன்றியுள்ளதைக் காணலாம். இதுதான் வளர்ச்சித் தத்துவம் அல்லது கூருதல் முறை (Evolution) எனப்படுவது. இதனைத் திருமாலே எடுத்து நிரூபிக்கின்றார். ஒவ்வொரு உயிரும் இந்தமுறை அனுசரித்து ஈடேறும் என்பதற்கு இந்த அவதார வரலாறே சான்றாகும். அதனையே மாணிக்கவாசகனார்,

**''புல்லாகிப் பூடாகிப் புழுவாய் மரமாகிப்**
**பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்**
**வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்....''**

என்று கூறுகிறார்.

மேலே கூறிய பத்து அவதாரங்களையே அன்றி, வேறுபல அருட்செயல்களையும் செய்திருக்கிறார். ஒரு காலத்தில் யானைக்கரசன் முதலையால் கடிபட்டு அலமோத, திருமால் கருடன்மீது எழுந்தருளி, முதலையை வதைத்து யானையைக் காப்பாற்றினார். துகிலுரித்து மானபங்கம் செய்தபோது வருந்தித் துதித்த திரௌபதியைப் பாதுகாத்து ஆடை பெருகும்படி அருளினார். இப்படிப் பல விதங்களிலும் அடியார்களைப்

பாதுகாத்துக் காப்புத் தொழிலைச் செய்திருக்கிறார். இவைகளை விவரமாகப் பாகவதம், விட்டுணு புராணம் முதலிய நூல்களில் படித்து அறிந்து கொள்ளலாம்.

இனிப் பேரூரிலோ அதனைச் சுற்றிலும் உள்ள கொங்குநாட்டிலோ திருமாலுக்கு ஆழ்வார்களால் மங்களாசாசனம் பெற்ற திவ்யதேசம் ஒன்றும் இல்லை. ஆழ்வார்கள் கொங்குநாடு வரைக்கும் விசயம் செய்யவில்லை. ஆகவே, அவர்களுடைய அருட்பாசுரங்களை எந்தத் தலமும் பெறவில்லை. பொதுவாகக் கூறுமிடத்துக் கொங்குநாட்டிலே, வைணவக் கோயில்களே மிகுதியாக இல்லை. காரமடை அரங்கநாதர் ஆலயத்தைத் தவிர, வேறு பெரிய ஆலயங்கள் இங்கே இல்லை. என்றாலும் பேரூருக்குத் திருமால் தொடர்பு இல்லாமல் போகவில்லை. முன்னர்க் காட்டிய பண்டைய திருமால் கோயில் மறைந்து போனாலும் பேரூரைச் சுற்றிலும் உள்ள மலைத்தொடர்களில் திருமால் வீற்றிருக்கும் மலை ஒன்று உண்டு என்று புராணம் கூறும். பேரூர் நாட்டிலேயே அதனைச் சேர்ந்த மேற்கு எல்லையாக உள்ளது ஒரு மலைத்தொடர் ஆகும். மலைத்தொடரில் ஐந்து மலைகள் உண்டு. அவைகள் ஐயாமலை, வெள்ளிமலை, பெருமாள்மலை, மருதமலை, நீலிமலை என்பன. பெருமாள்மலையில் பெருமாள் குடி கொண்டிருக்கிறார். ஆகவே பெருமாளின் கருணாகடாட்சம் பேரூர்நாட்டு மக்களின் மீது என்றும் வாய்த்திருக்கும். ஆகவே அவரை வழிபடுவோமாக!

## அதிமூர்க்கம்மன்

அதிமூர்க்கம்மன் என்ற திருப்பெயர் திருப்பேரூரின்கண் குடிகொண்டிருக்கும் கிராமதேவதையின் பெயர். இக்கிராம தேவதையின் கோயில் தெற்கு மாடவீதியில் வடமூலையிலிருந்து மேற்கே தள்ளி இருக்கிறது. வடக்குப் பார்த்த ஒரு சிறுகோயில். இக்கோவிலுக்கு, வெளியூர் யாத்திரிகர்கள் சென்று வழிபடுவது அரிது. ஆகவே, இக்கோயிலைப் பற்றி வெளியூரார்கள் மிகுதியாக அறியமாட்டார்கள். கோவை நகரத்தாரும் அறியமாட்டார்கள். ஆனால், உள்ளூராரும், கோயில் சிப்பந்திகளுமே அறிவார்கள். பண்டைய காலம் முதற்கொண்டு தொன்றுதொட்டுத் திருப்பேரூர்க் கோயிலிலே நடைபெறும் திருவிழாவின்போது, இந்தக் கிராம தேவதைக்கு முதல்நாள் உற்சவம் நடத்தி விட்டுத்தான் பெரிய

உற்சவம் நடத்துவது வழக்கம். அது இன்றைக்கும் நடைபெறுகிறது. இந்தக் கிராம தேவதையின் உற்சவ விக்கிரகமும், சிவாலயத்தில் கல்யாண மண்டபத்திலேதான் வைக்கப்பட்டு இருக்கிறது. இதனால் இக்கோயிலின் சிறப்பு விளங்குகிறது.

தமிழ்நாட்டில் ஒவ்வொரு ஊரிலும், ஒவ்வொரு கிராமதேவதை கோயில் உண்டு. இந்தத் தேவதையின் கோயில் மிகச் சிறியதாக இருக்கும். பெரும்பாலும் ஊருக்கு வடபுறமாய், வடக்குப் பார்த்த சன்னதியாக அமைந்திருக்கும். இக்கோயில்களில் உற்சவங்கள் தவறாமல் ஆண்டுதோறும் நடைபெறும். கிராமப் பொதுவில் அதனை நடத்துவார்கள். அவ்வூரில் சிவாலயமோ, திருமால் ஆலயமோ இருக்கும். ஆனாலும் முதல்உற்சவம் கிராம தேவதைக்கே நடக்கும். இதனால் என்ன ஊகிக்கலாம் என்றால், கிராமதேவதை கோயில் பண்டைக்கோயில் என்றும் சைவ, வைணவப் பெருங்கோயில்கள் பிந்தி ஏற்பட்டவைகள் என்றும் தெளிவுபடும். கிராமக் கோவில்கள் சிறிய கோயில்கள் ஆன படியாலும், அவைகள் ஊர்ப்புறங்களில் பாதுகாவல் இல்லாமல் இருந்ததினாலும், கிராமக் கோயில்களின் விக்கிரகங்கள் பெருங்கோயில்களில் பாதுகாக்கப்பட்டன. உற்சவ காலத்தில் அவைகள் கோயில்களுக்குக் கொண்டு போகப்பட்டன. பின்னால் திருப்பி, பெருங்கோவில்களுக்கே பாதுகாப்புக்காகக் கொண்டு வரப்பட்டன. இந்தமுறை எந்தக் காலத்திலும் எல்லா ஊர்களிலும் நடைபெறுகின்றது. இதே முறை பேரூரிலும் உண்டு.

பெருங்கோயில்கள் உள்ள ஊர்களில்தான் இந்தமுறை நடைபெறுகிறது. என்றால், பெருங்கோயில் இல்லாமல் கிராமக் கோயில் மட்டும் இருக்கிற ஊர்களில் எவ்வாறு நடைபெறுகிறது என்று பார்ப்போம். அப்படிப்பட்ட ஊர்களில் கிராமக்கோயில் மட்டும் உண்டு. அதில் மூலத்தானம் அம்மனாக இருக்கும். சில ஊர்களில் கல்சிலை இருக்கும். மற்ற ஊர்களில் மண்சிலை மட்டும் உண்டு. சில ஊர்களில் வெறும் மேடை மட்டும் இருக்கும். அங்கே உற்சவ காலம் வந்தால் குயவன் உருவாரம் ஒன்றைச் செய்து தருவான். அதனை மூன்று நாட்கள் கொலுவைப்பார்கள். ஊர்கோலம், பலி, வழிபாடு முதலியவை நடைபெறும். இறுதிநாள் ஊர்கோலம் செய்துகொண்டுபோய் ஊர் வெளியே முச்சந்தியிலே அல்லது, ஆற்றோரத்தில் உருவாரத்தை உடைத்துப் போட்டுவிட்டு வருவார்கள். ஆகவே, அவ்வூர்களிலே நிரந்தரமான

செப்புச் சிலை அல்லது உற்சவ விக்கிரகம் இருக்காது. இப்படிப்பட்ட கிராமக் கோயில்கள் கொங்குநாட்டில் பல உண்டு. உற்சவங்களும் தொன்றுதொட்டு ஒரே விதமாக நடைபெற்று வருகின்றன. கூத்தாண்டி, மாரியம்மன் முதலிய கோயில்களில் இவ்வாறு நடக்கும். பெரும்பாலான கிராமக் கோயில்களின் வரலாறு நமக்குக் கிடையாது. புராணம் எழுதப்பட்ட சில ஊர்களில், கோயில்களைப் பற்றி ஒரு சிறிதாக வரலாறு கிடைக்கக்கூடும். பேரூருக்கோ புராணம் உண்டு. ஆனால் அந்தப் புராணத்திலும் கிராமக் கோயிலைப் பற்றி ஒன்றும் இல்லை. ஆனால் பேரூருக்கு மற்றொரு பழைய நூல் கிடைத்திருக்கிறது. அதுதான் சோழன் பூர்வ பட்டயம் என்ற நூல். அதில் முப்பத்தாறு தலங்களைப் பற்றியும் கர்ணபரம்பரை வரலாறுகள் கூறப்பட்டுள்ளன. அவைகளில் ஒன்று பேரூராகும். அதில் கிராமதேவதையான அதிமூர்க்கம்மன் பற்றியும் பண்டைய கோயில் வழங்கிவந்த சரிதம் கூறப்பட்டுள்ளது. இந்நூலை இப்போது அரசியல் கையெழுத்து நூல் நிலையத்தார் பதிப்பித்திருக்கிறார்கள். அதனை நன்கு ஆராய்ந்து பார்த்தால், இந்தக் கோயில் வெகுபழமையானது என்றும், பின்னாலேதான் பேரூர் ஆலயத்து மூலத்தானம் கண்டுபிடிக்கப்பட்டது என்றும், அரசர்கள் பேரூர்க் கோயிலைக் கட்டினபோது, அம்மனுக்கும் கோயில் கட்டி ஏற்படுத்தினார்கள் என்றும், இந்நூல் கூறுகிறது. இந்நூலை ஆதாரமாகக் கொண்டு அடியில் கண்ட ஒரு வரலாற்றை எழுதுகிறோம்.

வெகு பண்டைக் காலத்தில் இப்போது இருக்கும் பேரூர் ஒரு பெரிய அரசவனக்காடாக இருந்தது. அது நொய்யல் ஆற்றங்கரையில் தெற்கே வெகுதூரமாகப் பரந்து இருந்தது. அந்த வனத்தில் ஒரு துர்க்கை கோயில் இருந்தது. அத்துர்க்கை வனத்தையும் காத்து வந்தது. அதன் பெயர் அதிமூர்க்கம்மன். வனத்தில் ஒரு இருளர்பதி இருந்தது. அவர்களின் தலைவன் பெயர் பேரை. அப்பதி அவன் பெயரால் பேரைப்பதி என்று வழங்கிற்று. அப்பேரையின் குலத்திற்கு அந்த அதிமூர்க்கம்மன் குலதேவதையாக இருந்தது. அந்தப்பதிக்கு ஊர்த் தேவதையாகவும் இருந்தது. அவ்வூர்க் குடிகள் தங்கள் தேவதைக்குப் பலிகள் கொடுத்து வழிபாடு செய்து வந்தார்கள். அப்பலிகள் முப்பலியாக ஆடு, கோழி, பன்றியும், ஆண்டுப்

பலியான எருமைகளையும், நிமித்தப் பலியான நரப்பலியும் என்று கூறப்பட்டுள்ளன. இந்த வகையில் வெகுகொடூரத்துடன் அந்த ககிராதேவதை ஆட்சி நடத்தி வந்தது. அந்த வனத்தைக் காத்து வந்தது. இவ்வாறு மக்களிடையே பலிவாங்கி வந்த கொடுமையை உத்தேசித்துத்தான் அந்த துர்க்கையை அதிமூர்க்க அம்மன் என்று அன்றிலிருந்து பெயரிட்டு அழைத்தார்கள் போலும். இக்கோயிலின் பழைமை ஒருவரும் கூற இயலாது.

இப்படி இருக்க, கரிகால் சோழன் தனக்கு ஏற்பட்ட சாபத்தீட்டை ஒழிப்பதற்காகக் கொங்குநாட்டுத் தலங்களைப் புதுப்பித்துக் கோயில் திருப்பணிகளை நடத்திக் குடிபோற்றும் ஆலய நிவந்தங்கள் முதலியவைகளைச் செவ்வனே முன்னிட்டு வந்தான். அவனுடன் சேரமான், சமய முதலி முதலியவர்களும் வந்தார்கள். நொய்யல் ஆற்றங்கரையில் பெரிய அரசங்காடு இருக்க, அதனை வேடர் கம்பளத்தை விட்டு அழிக்கையில், அங்கே வனத்தைக் காத்துக் கொண்டிருந்த அதிமூர்க்கம்மன் தோன்றி அதனைத் தடுத்தது. தனக்கு நரப்பலி கொடுத்தால் அல்லது வனத்தை அழிக்கக்கூடாது என்று சொல்லிவிட்டாள். சோழன், சமய முதலி மூலமாக அவ்வாறு தருவதாக வாக்களிக்க, துர்க்கை சாந்தி அடைந்தது. பிறகு காடுவெட்டி வெளியாக்கிக் கோட்டையும், பேட்டையும் கட்டி, பட்டிலிங்கத்திற்கு ஆலயமும் கட்டி, குடமுழுக்கு செய்து மானியம் தந்து திருவளாகம் முதல் அர்ச்சகர் வரை ஏற்படுத்தி, அவர்களுக்கு மானியம் முறை முதலியவைகளை ஏற்படுத்தி எல்லாவற்றையும் சோழன் அமைத்தான். அவன் கட்டின நொய்யல் ஆற்றங்கரையில் உள்ள துறைக்குக் கரிகால்சோழன் துறை என்று இறை பெயர் உண்டு. கரிகால் சோழன் தான் முன்னமே சொன்னபடி அதிமூர்க்கம்மனுக்குக் கோயில் கட்டி, திருப்பணி செய்து, மானியம் முதலியவைகளைக் கொடுத்து நிவந்தங்களை ஏற்படுத்தினான். எல்லா ஏற்பாடுகளும் செய்த பிறகு, அங்கு குடியேறினார் 100 குடிகளில் கோளரில் இரண்டு சோதரர்கள் தங்கள் வாலிப குமாரர்களை நரப்பலி கொடுப்பதாக முன் வந்தார்கள். அதற்காக அவ்விருவருக்கும் கோயில் கட்டளைப் பார்வை அதிகாரம் தரப்பட்டது. இரண்டு வாலிபர்களையும் முழுக்காட்டி, அணியாடை உடுத்தி சகல வாத்தியங்களுடன் அம்மன் முன்னிலையில் பலி கொடுத்தார்கள். அதன்பிறகு

முப்பலியும் எருமைப்பலியும் கொடுக்கப்பட்டன. சமய முதலி அம்மனை நோக்கி, அதுமுதல் நரபலி நிறுத்திவிட வேண்டும் என்றும் முப்பலி மட்டும் பெற்றுக் கொண்டு பேரையூரைக் காக்க வேண்டும் என்றும் வாக்குப் பெற்றுக் கொண்டான். சாவாரப் பலியான இரண்டு வாலிபர்களைப்போல் சிலைகள் செய்து அச்சிலைகளைக் கோயில் வாசலில் தாபித்து பூசை முதலிய நடத்தப்பட்டன. அந்தச் சிலைகளுக்கு முதல்பூசை எப்போதும் உண்டு. அதிமூர்க்க அம்மன் கோயில் பூசைக்கு ஆதி சோகி கோரக்க நாதர் வம்சத்தில் பண்டாரம் பூசாரியாக நியமிக்கப்பட்டான். இந்த நிபந்தனைகள் இதுகாறும் நடைபெறுகின்றனவாம். இந்த வரலாறு சோழன் பூர்வ பட்டயத்தில் கண்டது.

இந்த வரலாறு பேரூர்ப் புராணத்தில் இல்லை. பேரூர்ப் புராணம் பிந்தி வந்தது. கிராமதேவதை கோயில் பழைய தமிழர் வழக்கமாதலாலும், சைவ சம்பிரதாயத்திற்கு முரண் -படுகிறதானதினாலும் புராணத்தில் விடுபட்டிருக்கலாம். ஆனால் நடைமுறையிலும் பழக்கவழக்கங்களிலும் பார்த்தால் பட்டயத்தில் கண்ட வரலாறு பெரும்பாலும் மெய்யாக இருக்கலாம் என்று எண்ணலாம்.

அதிமூர்க்க அம்மனுக்குத் திருவிழாவும் தேரும் உண்டு. தனிப் படித்தரமும் இன்றைக்கும் உண்டு. சிவாலயத்திலேயே இவைகள் நடைபெறுகின்றன. அதிமூர்க்க அம்மன் ஆற்றல் அல்லது சக்தியின் திருவுருவம். அதனைப் பண்டைத் தமிழ்மக்கள் போற்றி வந்தார்கள். அவள் அருளாலே அவளுடைய ஆற்றலை பெற்றுப் பிழைத்து வந்தார்கள். தமது வாழ்க்கைக்கு நல்ல வழி கற்பித்த தேவதையை மறப்பார்களா? அதனை எண்ணியே அதிமூர்க்க அம்மனாகிய ஆற்றல் தேவதையை அவர்கள் வழிபட்டார்கள். இன்னும் வழிபடுகிறார்கள். இப்போதும் இதனைப் பேரூர் சென்று காணலாம்.